இதுவுமது.

அரங்கவை யேகொண்ட புத்தத் தியாக ராசடிக்கீழ்
வரங்கிடந் தேழை யுயிர்த்தே ஞெருமகண் மற்றவடோ
ளுரங்கெழு காளைபி னுள்ளினு முள்ளஞ் சுடுங்கொடுந்தீச்
சுரங்கடந் தாளம்ம வந்தியென் பார்க்கித் துயரில்லையே. (௩௫க)

நற்றாய் தலைமகள்பயிலிடந்தம்மொடுபுலம்பல்.

நடமே செயவல்ல செம்பொற் றியாகரை நல்லரசூர்
வடமேரு வில்லரை வாழ்த்தாரி னென்னைவைத் தாளெழுதும்
படமே படம்வைத்த சிற்றில்ல மேநொச்சிப் பந்தர்களே
தடமே யுமதிட மேயாடு மோவின்னுந் தையல்வந்தே. (௩௫௨)

நிமித்தம்போற்றல்.

பணிக்கட கம்புனை செம்பொற் றியாகர்பைம் போதிவனத்
தெணிக்கட மான்பைந் நிணப்பலி யென்று மிடுவல்பசிப்
பிணிக்கொடி யாதுண்ண லாமிரு கண்ணும் பிறழுமொரு
மணிக்கொடி யேயென் மடக்கொடி தன்னை வரக்கரையே. (௩௫௩)

நற்றாய் சுரந்தணிவித்தல்.

நளியற்ற வெஞ்சுர நாடுதண் காவிரி நாடெனலாய்த்
தெளியுற்ற நீர்த்தண் டுறைசைத் தியாக திருவருளா
லொளியுற்ற நின்வலப் பார்வையி னாலுயங் காதவண்ணங்
குளிருற் றிடச்செய்க மாகொடி யேன்பெற்ற கொம்பினுக்கே. ()

நற்றாய் தன்மகள் மென்மைத்தன்மைக்கிரங்கல்.

சிரமாலை பூண்ட துறைசைத் திரவியத் தியாகர்முன்னாட்
புரமாயக் கொண்ட குறுநகை போலழல் பொங்குவெங்காட்
டரமாய கற்றிரட் காற்றின வோபொன்னி னம்மனைசேர்
விரன்மானின் பஞ்சிக்கு மஞ்சிப்பின் வாங்கிய மெல்லடியே. (௩௫௫)

நற்றாய் தன்மகள் இளமைத்தன்மைக்கு உளமெலிந்திரங்கல்.

ஆடவ ரீர்குர வம்பாவை காளென் றழைத்துமுத்தஞ்
சூடவ ரீரென்று மென்னிளம் பாவை துறைசைமன்று
ளாடக மாடிய செம்பொற் றியாகர்நன் னாடவன்பாற்
பாடக மான தொடர்புற வெங்ஙன் பழகினளே. (௩௫௬)

---

௩௫௨. சிற்றில்லமே நொச்சிப்பந்தர்களே: நற்றிணை. கசங, கஅச,௩0௫; தஞ்சை. ௩௩௩ - ஆம் பாடல்களைப் பார்க்க.

௩௫௩. எணி - எண்ணி. ஒடியாது - மெலியாமல். இருகண்ணும் பிறழுமொரு மணிக்கொடி-காக்கை; "காகத்திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கு" திருச்சிற். எக.

௩௫௪. நளி - குளிர்ச்சி. வலப்பார்வை - சூரியன்.

௩௫௬. குராமரத்தின் பூவைப் பாவையென்றல் மரபு (௩௬௩); "குரவம் பயந்தசெய்யாப்பாவை" ஐங்குறு. ௩சச.

நற்றாய் தன்மகள் அச்சத்தன்மைக்கு அச்சமுற்றிரங்கல்.

வில்விலங் கும்புரு வத்தா ணடக்குமவ் வெஞ்சுரத்திற்
கொல்விலங் கொல்லென் றதிர்குரல் கேட்டொறுங் கோட்டிமலத்
தொல்விலங் கைத்தெறுஞ் சொன்னத் தியாகர் துறைசையன்னாள்
பல்விலங் கற்கண் வெரூஉமென்றெண் ணெஞ்சம் பதைக்கின்றதே. ()

கண்டோரிரக்கம்.

காந்திகொள் பூண்முலைப் பாங்கிய ரேங்கிக் கவலைவெள்ள
நீந்தறி யாரெமை நீத்தகன் றாளென நீர்ச்சடில
வேந்தனெங் கோமுத்தி யீசன் றுறைசை விளக்கனையா
ளேந்திளம் பாவையைக் கண்டுயிர் சோர்ந்திடு மீன்றவளே. (ந௫அ)

செவிலி ஆற்றாத்தாயைத் தேற்றல்.

ஒள்ளொளி மன்றத் தலர்தூற்று மாதர்முன் னோங்கரசூர்
வெள்ளொளி நீற்றுருச் செம்பொற் றியாகர்தம் வெள்ளிவெற்பின்
றெள்ளொளி பாய்ந்த திகந்தமும் போய்நனி தேர்ந்துகண்டியா
னள்ளொளி மேகலை யாளைத் தருவ லணங்கலன்னே. (ந௫கூ)

ஆற்றிடை முக்கோற்பகவரை வினுதல்.

செப்பநன் மாளிகைக் கோகழிச் செம்பொற் றியாகர்வெற்பின்
மைப்படி நோக்கிளங் கொம்பொரு காளைபின் வன்சுரத்தே
வெப்பழ லாற்றெதிர் சென்றனை ளேகுடை மேற்கவித்து
முப்பகை யுங்கெட முக்கோல் பிடித்த முனிவர்களே. (நசூ0)

மிக்கோர் ஏதுக்காட்டல்.

வருணத்திற் போதுந் தருத்தரும் போது மலர்ந்தவந்தத்
தருணத்திற் சூடுநர்க் கல்லா தவைக்கவை தாமென்செயுங்
கருணைத் திரவியத் தியாகேசர் கோகழிக் காரிகையா
யருணத் திலவித மூருமந் நீர்மைய ரன்பினர்க்கே. (நசூக)

செவிலி எயிற்றியொடு புலம்பல்.

அயிற்றிரி சூற்படை யார்மா சிலாமணி யார்துறைசை
வெயிற்றனி வேலொர் விடலையொ டென்மகள் வேட்கையென்னுங்
கயிற்றினிற் கட்டுண்டிக் கான்போகக் கண்டனை யேபுலியி
னெயிற்றிருந் தாலிக் கழுத்தி னெயிற்றி யெனுமகளே. (நசூஉ)

செவிலி குரவொடுபுலம்பல்.

விழிகாட்டு நெற்றியர் கோமுத்தி யீசர் விளங்குபொன்னிச்
சுழிகாட்டு முந்தியெந் தோகையொர் தோன்றல்பின் றூல்குடிக்கோர்
பழிகாட்டி யிந்தச் சுடுபாலை நீந்திப் படர்ந்தவந்த
வழிகாட் டிடாய்பல பாவைக ளோடிங்கு வாழ்குரவே. (நசூந)

---

நசூ0. செப்பம் - செம்மை. முப்பகை - காமம் வெகுளி மயக்கம்.

நசூக. வருணம் - நீர். இச்செய்யுளின்பொருள் கலித்தொகை, கூ-ஆம் பாட்டின் தாழிசைப்பொருள்களையும், திருச்சிற். உசஅ-ஆம்பாடலின் பொருளையும் தழுவிவந்துள்ளது.

நசூந. தோன்றல் - பாலைநிலத்தலைவன்.

செவிலி சுவடுகண்டிரங்கல்.

கவையே யழற்கண் ணெயினரி னஞ்சுங் களிற்றடிக
ளவையேயெங் கோமுத்தி யீசன் றுறைசையக் கள்வனடி
யுவையேசெம் பாரிடைப் பொற்ரு மரையி னுதித்திருந்த
விவையே வினையே னெடுத்தமின் பொன்னடி யின்சுவடே. (௩சுச)

செவிலி கலந்துடன்வருவோர்க் கண்டுகேட்டல்.

எம்போ லினங்களு மீன்ருளுந் தேடி யிடரழுந்த
நும்போல் வனப்பெய்தி யிச்சுரம் போயினர் நோக்கினிரோ
வெம்போர் மழுப்படைச் செம்பொற் றியாகர் வியன்றுறைசைக்
கம்போ கமுகோ வெனுங்கழுத் தாளுமொர் காளையுமே (௩சுரு)

கலந்துடன்வருவோர் புலம்பறேற்றல்.

அதரெதிர் யான்கண்ட சிங்கமன் னானு மழகியவென்
மதர்விழி மான்கண்ட மானனை யாளு மதிக்கிலன்னே
கதழெரிக் கான்சென்ற வெப்பாறச் சீதளக் காவிரிதோய்ந்
திதமுறக் கோமுத்தி யீசன் றுறைசையை யெய்துவரே. (௩சுசு)

செவிலி புதல்வியைக்காணது கவலைகூர்தல்.

தூண்டற் கருஞ்சுடர் சொன்னத் தியாகர் துறைசையுருத்
தாண்டற் கரும்வினை யோரிற் றிரிந்து சலித்தவென்கா
லீண்டற் புடன்கலந் தேகுநர்ப் பார்த்துக்கண் ணீடிழந்த
காண்டற் கரிதரி தான்மட மானையிக் கானகத்தே. (௩சுஎ)

---

## மீட்சி.

தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குணர்த்தல்.

தண்டுறை சைத்திருக் கோமுத்தி யீசர் தமைப்பணியாப்
பண்டுசெய் தீவினை யோர்குடி வாழும் பழுவத்தும்போய்
வண்டுறை பூங்குழன் மாதைத் துரீஇயன்னை வாடிவந்தேன்
கொண்டுசென் ருனெண் டிசையுங் கடந்தொரு கொற்றவனே. ()

தலைவன் தம்மூர்சார்ந்தமை சாற்றல்.

காம்பார் வரையின்முன் னீதோய் சிவமது கங்கையிது
பூம்பா திரிமலர் கொய்யும் பொழிலுவை பொன்னியிதே
யாம்பாடுங் கோமுத்தி யீசன் றுறைசையை யேத்தலர்போற்
றேம்பா தெழுந்தருள் சேல்விழி யாய்நந் திருநகர்க்கே. (௩சுகூ)

தலைவி முன்செல்வோர்தம்மொடு தம்வரல் பாங்கியர்க்கு உணர்த்திவிடுத்தல்.

ஒருவது வைக்கிசை யாரைத் தணந்துசென் றுற்றரசந்
தருவது சேர்திருக் கோமுத்தி யீசர் தமிழ்த்துறைசைத்

---

௩சுச. கள்வனென்றது தலைவனை. ௩சுரு. கம்போ - சங்கமோ.
௩சுகூ. சிவமதுகங்கை - ஒருதீர்த்தம். பொன்னி - காவிரி.

திருவது லன்னுமற் றியானுமிக் கானகந் தீர்ந்தினிதா
வருவது கூறுமுன் செல்வீரென் னுய மடந்தையர்க்கே. (௩௭௦)

முன்சென்றோர் பாங்கியர்க்கு உணர்த்தல்.

முன்வரக் கண்டறி யாதவொ ரோகையின் மூழ்குவிராற்
பொன்வரக் கண்டன பூங்குழ லாளொர் புரவலன்றன்
பின்வரக் கண்டனஞ் செம்பொற் றியாகர் பெருந்துறைசை
மின்வரக் கண்டபொற் பூண்முலை யீர்நல் விருந்தென்னவே. (௩௭௧)

பாங்கியர்கேட்டு நற்றாய்க்குணர்த்தல்.

சரியோ மறுகிடை யென்றிருந் தேமச் சமழ்ப்பறவே
யுரியோ னொருவன்பி னுன்மகள் கானிகந் தொண்பொழில்சூ
ழரியோசை நம்பதிக் கம்பொற் றியாக ரணியரசூர்ப்
பெரியோர் வருமென்று சொற்றனர் கேட்டின்பு பெற்றனமே. ()

நற்றாய் தலைமகனுளங்கோள் வேலனை வினுதல்.

மணந்தரு கோகழிச் செம்பொற் றியாகர் வரையிலெல்லா
முணர்ந்தருள் வேல சுரம்போகி மீளு மொருவனின்னே
கொணர்ந்திடு மோவென் மனைக்கேயென் மாதைக் குறைவில்வளந்
தணந்தறி யாத்தன் மனையுய்க்கு மோவொன்று சாற்றுகவே. ()

## தன்மனைவரைதல்.



பணிமொழி நற்றாய் மணனயர்வேட்கையிற் செவிலியை வினுதல்.

காதரந் தீர்த்தருள் செம்பொற் றியாகர்கண் ணூர்துறைசைப்
பூதர மேலன்பர் தாமாக மேவினும் பூங்குழையாய்
மாதர்நல் லாளைநம் மாமனைக் கேவந்து மன்றல்செய்வா
னுதர வாயவர் தாயருக் கோதிலெ னங்கணந்தே. (௩௭௪)

செவிலிக்கு இகுளை வரைந்தமை யுணர்த்தல்.

நற்றாய்க் கினியன்னை யென்னெனன் றியம்புவ நாந்துறைசைப்
புற்று டரவணி புத்தத் தியாகர் பொருப்பின்மன்ன
ருற்றார்க ளோடின்று நம்மட மாதை யுவந்துநன்னட்
பற்று வரைந்துகொண் டாரென்று தூதர் பகர்ந்தனரே. (௩௭௫)

வரைந்தமை செவிலி நற்றாய்க்குணர்த்தல்.

ஆன்றவர் வந்துநின் றுற்ற மணநல மங்கணெய்தித்
தோன்றல்பின் னுகஞ் சொன்னத் தியாகர் துறைசையன்னு
ளீன்றவட் கிண்ணிய விம்மனைக் கேவரு மென்றுநல்லா
யூன்றரு வாட்சில வொற்றர்முன் னேவந் துரைத்தனரே. (௩௭௬)

---

௩௭௨. மறுகிடைச்சரியோம். சமழ்ப்பு - நாணம்.

௩௭௪. காதரம் - அச்சம்.

தலைவன் பாங்கிக்கு யான்வரைந்தமை நுமர்க்கியம்புகென்றல்.

பெருந்தவர்க் கின்பருள் செம்பொற் றியாகப் பிரான்றுறைசைத்
திருந்தெம தூரகம் போய்மீண்டு வன்னிமுன் செவ்விளநீர்
பொருந்தன பாரங்கொண் மங்கைக்குப் பொன்னூண் புனைந்ததிறங்
கருந்தடங் கண்ணியின் கேளிர்க்கெல் லாஞ்சென்று கட்டுரையே.

பாங்கி தான் அது முன்னே சாற்றியதுரைத்தல்.

செங்கைத் தினத்தர் துறைசைத் திரவியத் தியாகர்வெற்பா
மங்கைப் பருவ மயிலைக்கொண் டேகினின் மாமனைவா
யங்கைத் தலம்பற்றி நுங்கேண்முன் னீபொன் னணிந்ததுநான்
சங்கைப் படாதறிந் தன்றே யுரைத்தனன் றாயருக்கே. (௩எஅ)

## உடன்போக்கிடையீடு.



நீங்குங்கிழத்தி பாங்கியர்தமக்குத் தன்செலவுணர்த்திவிடுத்தல்.

என்போ டணியுந் துறைசையெங் கோமுத்தி யீசர்வெற்பில்
வன்போ தகந்திரி கானங் கடந்தொர் வனைகழலான்
பின்போ யினளென்று சொல்லீரெம் மூர்ச்செலும் போரந்தணிர்
துன்போ டிரங்கித் தெருமந் திடுமென் றுணைவியர்க்கே. (௩எகூ)

தலைமகள் தன்செலவு ஈன்றாட்குணர்த்திவிடுத்தல்.

கையார நும்மைத் தொழுதிரந் தோதுவல் காமனம்பு
தையாத மாதவத் தாழ்சடை யீர்சென்று சாற்றுமின்யான்
மெய்யாகக் கோமுத்தி நாதன் றுறைசையொர் வீரனொடே
யையாறு தேர்மிசைச் செல்வதென் னீன்ற வவடனக்கே. (௩அ0)

நற்றாய்க்கு அந்தணர்மொழிதல்.

பரிவே மருவி வரிசிலை யேந்துகைப் பார்த்திவன்பின்
பிரிவே கருதிப் புலிவழங் கத்தநின் பேதைசென்றா
ளரிவேதன் போற்றரு சூர்மாசி லாமணி யாரையுன்னித்
திரிவேது மின்றி யனையே யிருந்திடு தேற்றமுற்றே. (௩அக)

நற்றாய் அறத்தொடுநிற்றலின், தமர் பின்சேறலைத் தலைவற்குணர்த்தல்.

தேனக்க பூங்கொன்றைக் கோமுத்தி யீசனைத் தென்றுறைசை
யானைப் பரசு மரசவிவ் வாரணி யத்திறவா
தூனக்க வாண்மின் னுடன்பற் கடித்திடித் தொண்பகழிச்
சோனைப் படைமுகில் பொற்றேர்ப் பருதியைச் சூழ்கின்றதே. ( )

---

௩எஅ. செங்கைத்தினம் - திருவாதிரைநாள்; "செங்கையாட்டினர்" திருநாகைக்காரோணப்புராணம், நைமிச. க.

௩எகூ. என்பையும் ஓட்டையுமணியும். ௩அஉ. இறவாது-கடவாதபடி.

தலைவியைத் தலைவன் விடுத்தகறல்.

கமரேயிக் கான்வருங் கானவ ராமைக் கடலையென்கைச்
சமரேய் கணைத்தெய்வ மொன்றே குடித்திடுந் தையனல்லாய்
குமரேச ரத்தர் துறைசையெங் கோமுத்திக் கூத்தர்வெற்பி
னுமரேற் கொலைக்கஞ்சு வேன்செல்க நீயிது நோக்கினின்றே. (௩அ௩)

தமருடன்செல்பவள் அவன்புறநோக்கிக் கவன்றரற்றல்.

ஏதத் துடனஞ்சு மெற்புறங் காத்தலி னேத்தரசூர்ப்
பூதத் திரட்படைக் கோமுத்தி யீசர் புவியெங்குமூர்
வேதத் துரகத்தின் வாழிய வெம்மையர் வில்வளையாத்
தீதத்தந் தோன்றிட வென்றந்த வீரன்றிண் டேர்ப்பரியே. (௩அச)

## வரைதல்.



சென்றோன் மீண்டுவந்து அந்தணரையும் சான்றோரையும் முன்னிட்டு வரைந்துகொண்டுழிக் கண்டோர் மகிழ்ந்துகூறல்.

ஆனூர் துவச னணைத்தெழு நாயக னுத்திமுடி
யானு தரவுறுந் தென்னா வடுதுறை யாண்டகைபோ
லானாத காதலின் யார்மணம் வேட்டன ராழிவைப்பி
லானா னிவன்றிரு மாலாயி னுண்மங்கை யச்செல்வியே. (௩அரு)

## இல்வாழ்க்கை.



தலைவன் தலைவிமுன் பாங்கியைப்புகழ்தல்.

பேதாதி பேதங்கொள் சோபான நீத்துப் பிறழ்வரிதாம்
ஆதார முற்று மலாத்தவி சேறினம் யாமரசூர்
நாதாந்தர் செம்பொற் றியாகேசர் வெற்பிலங் நாண்முதலா
நீதா னெடுத்த வுழப்பினிவ் வாறு நிலைபெற்றதே. (௩அசு)

தலைவனைப் பாங்கிவாழ்த்தல்.

முன்னாண் மறையென்ன நீசொன்ன வஞ்சின முற்றுவித்தே
யிந்நாட் கதிரவ னெங்கெழி லென்னெனு மின்புதந்தாய்
பொன்னார் துறைசை யணைத்தெழு நாயகர் போற்பிரியா
தென்னாளு மெம்பெரு மான்வாழி வாழி யிவளுடனே. (௩அஎ)

---

௩அச. தீது அத்தம் - வெம்மையையுடையதாகிய அருநெறி.

௩அரு. ஆத்திமுடியான் ஆதாவுறும். ஆனாத - அமையாத. இவன் திருமாலானன் மங்கை அச்செல்வியாயினள்; செல்வி - திருமகள்.

௩அஎ. "எங்கெழிலென் ஞாயிறு" திருவாசகம், திருவெம்பாவை. ௧௯.

வரையு நாளளவும் வருந்தாதிருந்தமை பாங்கி தலைவியை வினாதல்.

வரையும்பொற் றாணும் பொருபுய னுன்னை வரையுமிந்நாள்
வரையுமெவ் வாறிட ராற்றி யிருந்தனை மாதர்தொய்யில்
வரையுந் தனத்தி துறைசையெங் கோமுத்தி வள்ளல்வெற்பில்
வரையுமிக் கும்புரை தோளியர் தூற்றலர் வாளிகொண்டே. (ஙஅஅ)

தலைவி வருந்தாதிருத்தற்குக் காரணங்கூறல்.

ஏயும் விரக விடத்தையெல் லாங்கொக் கிறகறுகு
வேயுந் துறைசைக் கனகத் தியாகர்தம் வெற்பர்தந்த
பாயுங் கதிர்மணி யாலவர் சொன்ன பதமனுவால்
நீயும் மொருமருந் தாயுற லான்மெல்ல நீத்தனனே. (ஙஅகூ)

பாங்கி தலைமகனை வரையுநாளளவும் நிலைபெறவாற்றிய நிலைமைவினாதல்.

புரைவிடை யப்பகை வென்றூர்க் கருடரும் பூந்துறைசை
நரைவிடை யம்பொற் றியாகேசர் வெற்பிலிந் நாருளநீ
வரைவிடை வைத்தக னுண்முத லாகவிம் மாதினவாத்
திரைவிடை கொண்டதெங் கேநின்ற தெங்குன் றிருவுளமே. (ஙகூ0)

பாங்கி மணமனைச்சென்றசெவிலிக்கு இருவரன்புமுரைத்தல்.

தலைவனெங் கோமுத்தி யீசன் றுறைசைநந் தண்கொடிமென்
முலைமுகை காட்டி முகமலர்ந் தார்வ முருகுபொங்கத்
தொலைவரு செவ்விதழ்த் தேன்றர லாலன்னை தோய்ந்தன்பர்தா
மலைவில்வண் டாயுண் டகமகிழ் கூரு மனுதினமே. (ஙகூக)

பாங்கி இல்வாழ்க்கைநன்றென்று செவிலிக்குரைத்தல்.

ஆலடி யார்தென் னரசூர் கோமுத்தி யங்கணனூர்
வாலடி யார்க்கன மிட்டில் லறத்தியல் வாய்ந்துகஞ்சம்
போலடி நின்மக டன்கேள் வனையென் றும் பொற்கலத்திற்
பாலடி சின்மிசை வித்துடல் பூரிக்கும் பான்மையளே. (ஙகூஉ)

மணமனைச்சென்றுவந்தசெவிலி பொற்றொடிகற்பியல் நற்றாய்க்குணர்த்தல்.

சிரமங்கை யாண்டவர் செம்பொற் றியாகர் திருத்துறைசை
வரமங்கை யாள்கற்பை யென்சொல்லு கேன்மனை வாழ்க்கையிற்கந்
தரமும் பொழிகவென் றுற்றுரை கான்றிடுஞ் சாய்ந்துபட்ட
மரமுந் தழைகவென் றுன்மலர் பூத்து மணந்தருமே. (ஙகூங)

செவிலி நற்றாய்க்கு மனைவாழ்க்கைத்தன்மையுணர்த்தல்.

வானும்ப ரன்புற்ற செம்பொற் றியாகர் வயல்வளைமுத்
தீனுந் துறைசையி னீயுநின் கேள்வனு மேவல்செயும்
யானு மிருப்பதின் மிக்காமில் வாழ்க்கையி னின்மகடூஉத்
தானுந்த னன்பனுந் தன்னைப் பணிகின்ற தையலுமே. (ஙகூச)

---

ஙஅஅ. வரை - மலை, இந்நாள்வரையும் - இந்நாள்காறும். தொய்யில் வரையும் - கோலமெழுதப்படும். வரையும் இக்கும் - மூங்கிலும் கரும்பும்.
ஙகூ0. புரை - குற்றம். ஙகூஉ. வால் - தூய்மை.

செவிலி நற்றாய்க்கு இருவர்காதலும் அறிவித்தல்.

பல்கிய சீரர சூரொப்பி லாமுலை பாகர்வெற்பி
லொல்கிடை யாளும் பிறிதொரு தெய்வ முளத்துமெண்ணுள்
மல்கிசை யார்கடல் போல்வருந் தெம்முனை மாட்டுறினு
மல்கி வரலறி யாதண்ண றேர்மற்றெ ரல்கலுமே. (௩௬௫)

## பரத்தையிற்பிரிவு.



காதலன்பிரிவுழிக் கண்டோர் புலவிக்கு ஏதுவிதாமிவ் விறைவிக்கென்றல்.

விடைக்கண் ணெழுந்தருள் செம்பொற் றியாகர் வியன்றுறைசை
யிடைக்கண் ணகல்வய லூரன் பவனி யினிதுவரப்
படைக்கண் வலையிற் பகற்சூறை யாடிடும் பாவையர்க்குக்
கடைக்கண் ணருள்செய்த லாலாகு மாதயர் காரணமே. (௩௬௬)

தனித்துழியிறைவி துனித்தழுதிரங்கல்.

உமையா ளொனுமொப்பி லாமுலை நாயக ரோங்கரசூ
ரமையாத காத லூரியோன் பிரிய வரியவெப்பாற்
கமையாது கண்மழை யாலணை மூழ்கிடக் கங்குலெல்லா
மிமையா தழுங்குநர் யாரெனைப் போற்சில ரேழையரே. (௩௬௭)

ஈங்கிதுவென்னெனப் பாங்கிவினாதல்.

எம்பர மானந்தர் செம்பொற் றியாக ரிடங்கொடிசை
யம்பர நாதர் துறைசைநல் லூர னனுதினமுங்
கம்பமி லாமற் கவசம தாயுனைக் காக்கவுநீ
கொம்பரி லாத கொடிபோற் றவிப்பதென் கோமளமே. (௩௬௮)

இறைமகன்புறத்தொழுக்கு இறைமகளுணர்த்தல்.

கிள்ளையஞ் சொல்விநஞ் சொன்னத் தியாகர் கிளர்துறைசை
யுள்ளல ரிற்கொடி யேனையப் பொன்மார் புவந்தளித்தான்
பள்ள வயற்செந்நெல் வீழ்த்தேகி மேதிப் பகடருகே
வள்ளை குதட்டி யருந்தூரன் சேரி மடந்தையர்க்கே. (௩௬௯)

---

௩௬௫. பல்கிய - பெருகிய. "தெய்வந்தொழாஅள்" திருக்குறள், ௫௫.

௩௬௬. ஊரன் - மருதநிலத்தலைவன். பகற்சூறை - பகற்கொள்ளை.

௩௬௭. கமையாது - பொறாது. அணை - படுக்கை, நீர்க்கரை.

௩௬௮. திசையம்பரநாதர்-திகம்பரர். "கொம்பரில் லாக்கொடி போலல மந்தனன் கோமளமே" திருவாசகம், நீத்தல். ௨௦.

௩௬௯. கொடியேன் னைய. செந்நெல் தலைவிக்கும் மேதிப்பகடு தலைவனுக்கும் வள்ளைக்கொடி பரத்தைக்குமுவமை. சேரிமடந்தையர் - பரத்தையர்.

தலைவியைப் பாங்கிகழறல்.

உவருந்தி நீருண் டுலாவிய மேக மூவந்துதன்பால்
கவரும் படிவரிற் பாற்கட லானது காய்ந்திடுமோ
துவருந்து வாய்மங்கை சொன்னத் தியாகர் துறைசையன்ப
ரவரின்ன ரென்பது கற்பினிற் பாருக் கழகல்லவே. (௪௦௦)

செவ்வணியணிந்து சேடியைவிடுத்துழி அவ்வணி உழையர்கண்டு அழுங்கிக்கூறல்.

கலரா லறிதற் கரியவெங் கோமுத்திக் கண்ணுதலார்
சலராசி யன்ன கிடங்கெயில் சூழ்தண் டுறைசையன்னீர்
மலராய் மணந்தரு நுங்குல முல்லையில் வந்தவம்மா
னலராம் பெரிய சரந்தொடுப் பார்க்கெங் ககப்பட்டதே. (௪௦௧)

பரத்தையர்கண்டு பழித்தல்.

இருங்கல னேடுகொள் சொம்பொற் றியாக ரெழிற்றுறைசை
நெருங்கலங் காரநல் லூரனில் லத்துறை நேரிழையா
ரருங்கல னாகிய நாண்போக்கிச் சேரிவந் தாய்தொடியீ
ரொருங்கலர் பூத்த முருக்கிளங் கொம்பி னுதித்தனரே. (௪௦௨)

பரத்தையர் உலகியனோக்கிவிடுத்தலின், தலைவன்வரவுகண்டுவந்து வாயில்கள்மொழிதல்.

ஒண்ணந்தி கோமுத்தி யீசன் றுறைசை யுறூர்களின்மண்
விண்ணந் தினுமழி யாதகற் பாட்டி விடநடந்த
வண்ணந் திகழுருச் சேடியைச் சேரி மனையிற்கண்டு
தண்ணந் திரைப்புன லூரன்வந் தானிது தக்கதுவே. (௪௦௩)

தலைமகன்வரவு பாங்கி தலைவிக்குணர்த்தல்.

சதிர்கொண்ட வர்க்குமோர் தாழ்வுள தாந்தணந் தாரெனினு
மதிர்கொண்டல் சூழர சூர்மாசி லாமணி யார்க்கன்பர்போற்
கதிர்கொண்ட வேலன்பர் தேர்மீது வந்துன் கடையினின்று
ரெதிர்கொண்டு போற்றவர் குற்றங்கொ ளாதினி யேந்திழையே. ()

தலைவனைத் தலைவி எதிர்கொண்டுபணிதல்.

கலந்தார் பெறுநலங் கூறுந் தரமன்று காதலர்தாங்
கிலந்தான் பிரிபிற் பசப்புமற் றேயின் கிளிமொழியா
யலந்தாரைக் காக்கு மரசூரர் சோமுத்தி யப்பர்வெற்பிற்
புலந்தாவ தெங்ஙன்முன் பொன்பூத்த கொங்கை புளகித்ததே. ()

---

௪௦௦. உவருந்தி - உவரையுடைய கடலில்; பாலைக்கவரும்படி. உவர்க் கடல் பரத்தைக்கும், மேகம் தலைவனுக்கும், பாற்கடல் தலைவிக்குமுவமை.

௪௦௧. கலர் - கீழ்மக்கள். சலராசி - கடல். குலமுல்லையில் - குலமாகிய முல்லைநிலத்தில். மானென்றது தலைவியை. சரம் - அம்பு.

௪௦௨. ஓட்டினை உண்கலனாகக்கொண்ட. ஊரனுடையவீட்டில். முருக் கிளங்கொம்பு - முள்ளுமுருங்கையின் இளங்கொம்பு.

௪௦௫. கிலம் - அற்பம். அலந்தார் - மெலிந்தார். புலந்து ஆவது என்ன.

புணர்ச்சியின்மகிழ்தல்.

துடியிடை யாள்கொங்கைக் கோடுக ளென்செங்கைத் தோணியதா
மடிவறு மோதத் திரையென்ன முத்து வடநுடங்கக்
கொடிமதிற் கோகழிச் செம்பொற் றியாகரைக் கூடியசீ
ரடியவர் போலவின் ருனந்த மாக்கட லாடினமே. (சு0கூ)

வெள்ளணியணிந்துவிடுத்தல்.

விரையார்ந்த மல்லிகைத் தாருமுத் தாரமும் வேய்ந்துபொன்னி
நுரையா மெனும்வெள் ளுடுக்கை யுடஇயன்பர் நோற்குநல்லா
திரையானெங் கோமுத்தி யீசன் றுறைசையிற் சேயுதைய
முரையாட மாதர்முன் னேடின ரோகைகொண் டேரனுக்கே. (சு0எ)

வெள்ளணியணிந்துவிடுத்துழித் தலைமகன் வாயில்வேண்டல்.

இலவிதழ் மாதர்நல் லாருட னீசென் றிறைஞ்சியென்பாற்
பலவித மாக்குறை யெண்ணி மருத படியரசூர்
நிலவிய கோமுத்தி யெம்மான்கைம் மானை நிகர்விழியாள்
புலவியை யாற்றுதி கூற்றுதித் தன்னகட் பூங்கொடியே. (சு0அ)

தலைவி நெய்யாடியது இகுளை சாற்றல்

ஐயா னனத்தையர் செம்பொற் றியாக ரருட்டுறைசைப்
பையா டரவல்குல் பாலற் பயந்து பரிமளங்கூர்
நெய்யா டினளவண் மெய்யாற வேண்டு நிகழ்துனியுஞ்
சையா சலம்பொரு மார்பா தணியவும் வேண்டுமின்றே. (சு0கூ)

தலைவன் தன்மனத்து உவகைகூர்தல்.

பாராட்டு நல்ல தவஞ்செய்த நானவள் பச்சுடம்புஞ்
சீராட்டு செங்கையிற பாலனும் பான்முலைச் செப்பழகுந்
தாராட்டு மார்பர் கனகத் தியாகர் தடந்துறைசை
யேராட்டி நெய்யிட்ட கோலமுங் காண்குவ னின்றுசென்றே. (சுக0)

தலைவிக்கு அவன்வரல் பாங்கி சாற்றல்.

தென்கோ கழிநகர்ச் செம்பொற் றியாகர் சிலம்பில்வெள்ளை
யென்கோலங் கண்டனர் சொல்லுமுன் னேகடை யெய்திநின்ரு
ருன்கோலக் கையுங் குழவியுங் காணநம் மூரர்நல்லாய்
வன்கோடை யார்வெப்ப மோதட்ப மோவுன் மனத்தூற்றதே. (சுகக)

தலைவியுணர்ந்து தலைவனேடுபுலத்தல்.

முறுவற் படையிற் புரமாய்த்த கோமுத்தி மூர்த்தியெங்கோ
னுறுவர்க் கருளர சூரி ருமக்குரி யாரிடைப்போஞ்
சிறுவற் பயந்தவென் மேனியி னையவித் தேய்வைபடின்
மறுவற்ற வும்முடை மார்பணி வீணே மறுப்படுமே. (சுகஉ)

---

சு0எ. உடஇ - உடுத்து. நல்ஆதிரையான் - நல்லதிருவாதிரைநாளையுடையான். இறைவனுக்கு உரியநாள் திருவாதிரை.

சு0கூ. ஐஆனனத்தர்-ஐந்து திருமுகங்களையுடையார். சையாசலம்-சையகிரி.

சுகஉ. உறுவர் - முனிவர். ஐயவித்தேய்வை - சிறுகடுகை அரைத்த

பாணனைமறுத்தல்.

மடக்கொடி பாகன் றுறைசையெங் கோமுத்தி வள்ளல்வெற்பர்
தடுக்கரு மன்புநின் பாலுள ரென்பதென் றண்ணறும்பூத்
தொடுக்குந் துறையிற் றொடாக்கள்ளி வீவிற்கத் தோன்றினையோ
விடக்குதின் னிப்புலை யாபோக வேறொரு வீடறிந்தே. (சகங)

வாயின்மறுக்கப்பட்ட பாணன் கூறல்.

அறிந்தில ரென்னைக் கொதித்துப் புகையுயிர்த் தம்மவென்மே
லெறிந்தகற் போது மினிக்கல் லெடேலெம் பிராட்டிபந்தம்
பறிந்திடச் செய்தருள் கோமுத்தி யீசர் பதியரசூர்ச்
செறிந்தவர் போலுன தாள்பணி வேன்கதந் தீர்ந்தருளே. (சகச)

விறலி வாயின்மறை.

மூளா வழலினுள் ளங்கனல் வேன்கண்கண் மூடுதுயி
லாளாவன் றேயர சூர்மா சிலாமணி யார்புகழைக்
கேளார் செவியிற் குணம்போன தென்செவி கேழுலம்போற்
றோளார்க் குகந்தவர் பாற்பாடு பாடினி தோடியையே. (சகரு)

கூத்தன் வாயின்மறை.

வீரிய மாக வெனைப்பணி கூத்திதென் வெவ்விருட்கோர்
சூரிய னாகிய கோமுத்தி யீசன் றுறைசையென்னும்
பேரிய லூரர்முன் சேரிப் பரத்தையர் பின்றொடர
வாரிய நீயுன் னவினயக் கூத்தையங் காடுகவே. (சகசு)

பாங்கி வாயின்மறை.

தண்ணார் சிறுபறை கொட்டி யுலாமித் தனிமகவைக்
கண்ணாகப் பெற்றபின் செம்பொற் றியாகர் கவின்றுறைசை
யொண்ணா ரியர்முனின் றவ்வோசை கேட்டுநம் மூரர்வந்தார்
புண்ணான நெஞ்சுடை யேன்பெற்ற பேறிது பொற்றொடியே. (சகஎ)

விருந்தொடுவந்துழிப் பொறுத்தல்கண்டு தலைமகன் மகிழ்தல்.

போர்க்குஞ் சர்வுரிப் புத்ரத் தியாகர்தம் பூந்துறைசை
யீர்க்கு நடுநுழை யாமுலை யாளிடத் தெய்து துனி

---

குழம்பு; ஐயஇத்தேய்வை யெனப்பிரித்து, நின் மேனியிலுள்ள அழகிய இந்தச் சந்தனக்குழம்பெனினும் பொருந்தும்.

சகச. பந்தம்பறிந்திடச் செய்தருள்: திருமயிலை முதலிய தலங்களில் திருவிழாவினீற்றில் பந்தம்பறியென்ற ஒரு விசேடக்காட்சி நடைபெறுகின்றது. "கொல்லாண் டிலங்கு மழுப்படை யோன்குளிர் தில்லையன்னாய், வில்லாண் டிலங்கு புருவநெரியச்செவ் வாய் துடிப்பக், கல்லாண் டெடேல்கருங் கண்சிவப் பாற்று கறுப்பதன்று,பல்லாண் டடியே னடிவலங் கொள்வன் பணிமொழியே" (திருச்சிற். உசஅ) என்பதன்பொருள் இச்செய்யுளில் வந்துள்ளது.

சகரு. பாடினி - பாடுபவள். தோடி - ஓரிராகம்.

சகஅ. ஈர்க்கும் நடுநுழையா முலையாள்: "ஈர்க்கிடை போகா வேரிள வனமுலை" (பொருந.கூசு) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க; உ-ஆம்பதிப்பு.

தீர்க்கும் படியவள் செங்கனி வாயிற் சிறுமுறுவல்
பார்க்கும் படிவிருந் தாய்வந்த தாலென்பண் டைத்தவமே. (சகஅ)

விருந்துகண்டொளித்தலூடல் பள்ளியிடத்து வெளிப்படத் தலைமகனேக்கிச்
சீறேலென்றவள்சீறடி தொழுதல்.

ஏறேறு கோமுத்தி யீசன் துறைசையி லெங்கடவப்
பேறே யெனவரு பேராட்டி யின்றெண் பிழையையெண்ணிச்
சீறேலுன் சீறடி பற்றினன் யான்சிறி யோர்பிழையோர்
நூறே செயினும் பொறுப்பரன் றேயரு ளேக்கினரே. (சகசூ)

ஈது எங்கையர்காணின் நன்றன்றென்றல்.

கங்கையஞ் செஞ்சடைச் செம்பொற் றியாகர் கவின்றுறைசை
மங்கைய ராட மணங்கூர்பொன் னித்துறை வாவெனது
கொங்கை முயங்க வணங்கிச் சிரத்திற்கை கூப்பிநிற்ப
தெங்கையர் செங்கழு நீர்க்கண்கள் காணி னினிதல்லவே. (சஉ0)

நின்னலது அங்கவர்யாரையும் அறியேனென்றல்.

ஆவியொன் றேயிவ் வுடலிரண் டார்வ மறப்புலந்தாற்
பாவியென் னேசெய்வன் பைந்தொடி யேபடி யேயெழுதா
வோவிய மேதிருக் கோமுத்தி யீச ருறைதுறைசைக்
காவிரி தோய்ந்துவப் பார்தோய்வ ரோசிறு காற்புனலே. (சஉக)

காமக்கிழத்தியைக் கண்டமைபகர்தல்.

பொன்மறு கோடித் தனிவிளை யாடும் புதல்வற்புல்ல
வுன்மக னேயிவ னேயுற னீயு முவனன்னையே
நின்மனை யேயிது வாவென நாணி நிலங்கிளையாச்
சொன்மறந் தேகினள் சொன்னத் தியாகர் துறைசைமின்னே. ()

தலைவியைப் பாங்கி புலவிதணித்தல்.

ஆடிச் சிவந்தருஞ் செம்பொற் றியாகருக் கன்பருன்றுள்
சூடிச் சிவப்பொழி யென்னவும் பாராய் துறைசைநல்லாய்
சேடிச் சிறுமியர் சூழ்தெய்வ குஞ்சரி தேங்கடம்பன்
வேடிச்சி கொங்கை தழீஇவந்த போதும் வெறுத்திலளே. (சஉ௩)

---

சஉக. படி - ஒப்பு; பிரதி. சிறுகால் - சிறிய வாய்க்கால்.

சஉஉ. பொன்மறுகோடி...ஏகினள்: "பொலந்தொடிப் புதல்வனைத், தேர்வழங்கு தெருவிற் றமியோற்கண்டே, கூரெயிற் றரிவை குறுகி யாவருங், காணுந ரின்மையிற் சேர்த்தனள் பேணிப், பொலங்கலஞ் சுமந்த பூண்டாங் கிளமுலை, வருக மாளவென் னுயிரெனப் பெரிதுவந்து, கொண்டனள் நின்றோட் கண்டு...நீயுந் தாயை யிவற்கென யான்றற், கரைய வந்து விரைவனள் கவைஇக், களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா, நாணி நின்றோ ணிலைகண்டி யானும், பேணினே னல்லனோ" அகநானூறு, கசு.

சஉ௩. சிவப்பு - கோபம். தெய்வக்குஞ்சரி - தெய்வயானை. கடம்பன் - முருகக்கடவுள்; "கடம்பமர் செவ்வேள்" வேடிச்சி - வள்ளியம்மை.

தலைவி புலவிதணியாளாகத் தலைமகனூடல்.

கருங்காலற் செற்ற துறைசையெங் கோமுத்திக் கத்தர் வெற்பிற்
பெருங்காதல் பூண்டயர் பேதைநெஞ் சேவஞ்சம் பெற்றவிவ
ளொருங்காய நீத்தன் றுயிர்த்துணை யாமம் முடன்கலவா
வருங்கான கத்தி லடிநோவ வந்த வமிர்தல்லளே. (சஉச)

பாங்கி அன்பிலைகொடியையென்று இணர்த்தார்மார்பனையிகழ்தல்.

பாம்பார்த்த கோமுத்தி யீசன் றுறைசைப் பனிவரைமேற்
றேம்பார்த் தமிழ்தென்ன வந்நா ளருந்தினிர் தேரிலிந்நாள்
வேம்பா யுவர்த்தனி ரெங்கள்பொன் றுளைமென் கோவியர்கைத்
தாம்பா லடியுண்ட மாயனைப் பீரும்ம தன்மைநன்றே. (சஉரு)

பாங்கி தலைமகற்கு மகப்பொறைகூர்ந்தவண்ணமுரைத்தல்.

நவ்வியங் கையரெங் கோமுத்தி யையாநன் னீர்த்துறைசைக்
கொவ்வையஞ் செங்கனி வாயாண் மகப்பொறை கூர்ந்தவந்தச்
செவ்வியிற் றத்தநற் செவ்வியைப் பெற்றன செவ்விலவு
மைவிரி காவியு மாயோ னமளியும் வானமின்னுமே. (சஉசு)

தலைவன் புதல்வனைக்காண்டல்,

ஆடுந் திரவியத் தியாகேசர் கோகழி யந்தணர்க்கு
மாடுங்கற் றுவு மளித்திமை யோர்க்கு மலர்களும்விண்
மூடும் புகையும்பெய் தெல்லோரும் வாழ்த்தச்செய் முற்றவத்தாற்
கூடும் புதல்வனைக் கோவுங்கைக் கொண்டுகொண் டாடினனே. ()

தலைவன் பள்ளியிடத்து அழுங்கல்.

சுரும்புறங் காத்தொடைச் சொன்னத் தியாகர் துறைசைநன்னாட்
டிரும்புற வப்பதி யொப்பாய்செப் பான விருதனமுங்
கரும்புறழ் தோளு மணையா ரணையக் கவினெழுதற
கரும்புற மானமெய் யோவினை யேனுக் கருளியந்த. (சஉஅ)

---

சஉச. அன்று - உடன்போன அந்நாள்; "பணடு பைம்பொற், கழங்கா டிடமும் கடிமலர்க் காவுங் கடந்துபுள்ளும்,வழங்கா வழிநமக் கோர்துணை யாய் வந்த மானல்லளே" (தஞ்சை. ச0உ) என்பது இதன் பின்னிரண்டடிகளோடு ஒத்துள்ளது.

சஉரு. தேம்பார்த்து-இடம்நோக்கி. உவர்த்தனிர் - வெறுத்தீர். மாயன்-கண்ணன. 'மாயனைப்பீர்' என்றது குறிப்பு. உம்ம - உம்முடைய.

சஉசு. முன்னமே தலைவியின் அதரம், கண்கள், வயிறு, இடை என்னும் நான்கிற்குந்தோற்று அழகிழந்திருந்த செவ்விலவம்பூ முதலிய நான்கும் இவள் கருவுற்ற இந்நாளில தமக்குரிய பண்டைக்கவின்பெற்றன; இவளுறுப்புகள் வேறுபட்டிருந்தன என்றபடி.

சஉஎ. மாடு - பொன். கற்று - கன்றையுடையபசு. புகை - ஓமத்திற் புகைக்கப்படும் பொருள்கள்; ஆகுபெயர். வாழ்த்தக் கைக்கொண்டு.

சஉஅ. புறவப்பதி - சீகாழி. அணையார் - படுக்கை. அணையாரணைய: இது சொல்முரண். இச்செய்யுள் புறங்காட்டலென்றுங் கூறப்படும்.

காமக்கிழத்தி வாயில்வேண்டல்.

மாரனை நீறு படக்கண்ட கண்ணர் வளர்துறைசை
யாரனை யாதருள் சோமுக்கி யீச ரவர்க்குரிய
பேரனை யாயுன் னகக்கே கறுப்பப் பிறத்தறகா
தூரனை யாதவப் பாயெங்க ணீர்மைகொ ளுன்னருளே .(சஉகூ)

மகனும் ஆற்றாமையும் வாயிலாகத் தலைமகன்வக் கழித் தலைமகள் எதிர்கோடல்.

சூழ்ந்தார் கலியிற் பெருவேட்கை யோங்கினுந் துப்புரவோர்
தாழ்ந்தா ரிடைமனங் காழ்ப்பர்கொல் லோசன்ம சாகரத்தில்
வீழ்ந்தாரை யேற்றுமெங் சோமுக்கி யீசர் விரும்பாரூர்
வாழ்ந்தாரும் வாழ்த்து வயலூரர் காம மகிப்பதன்றே. (சஙo)

தலைமகன்புணர்ந் துநீங்கியபின் வந்தபாங்கியொடு தன்மகனைப் புகழ்தல்.

உம்மைப் பிறவிக்கொன் னேபோய வேம்பவக் கொன்றுமின்பு
மிம்மைப் பிறவியி லெய்வந் தான்மைந்த னேந்திழையாய்
சும்மைப் புனற்சடைச் சொன்னத் தியாகர் துறைசையொப்பாய்
மும்மைப் புவியும் புகழூரன் மீண்டு முயங்கிடவே. (சஙக)

தலைவி தலைவனைப் புகழ்தல்.

செந்நாப் புலவர் துதிக்குந் திரவியத் தியாகரென்று
மன்ற வடுதுறை மன்ற கியநம் மகிழ்நர்நம்பா
லந்நாளுநண் டாயநட் பிந்நாளு மோவில ராகலினு
னன்னுளிற் கொண்டவன் போலொரு கேளிரு நாடிலின்றே, (சஙஉ)

பாங்கி தலைவியைப் புகழ்தல்.

புனலுற்ற பூம்பொய்கை யூரன் கொடுமை புரிந்தவெல்லா
மனமுற் றிடாமன் மறந்தெம் பிராட்டி வணங்குதலாற்
றனகற்ற சிந்தையர் சூழ்திரு வாவடு தண்டுறைவாழ்
கனகத் தியாகர்தஞ் சீரரு ளேயன்ன காட்சியளே. (சஙங)

## ஓ த ற் பி ரி வு.



கல்வியிற்பிரிவு பாங்கிக்குத் தலைவன் அறிவுறுத்தல்.

பொருவொன் றிலாதது புண்ணியக் கல்வி புகன்றிடினேர்
திருவு மமிர்துந் தருங்கடல் போலுந் தெரியிழையா
யருவு முருவுமுள் ளார்மாசி லாமணி யார்துறைசை
மருவுந் தவத்தினர் போல்வள ராநிற்பர் வாய்த்தவரே. (சஙச)

---

சஉகூ. ஆரன் - ஆத்திமாலையையுடைய சோழன். பேர், மாசிலாமணி யென்பது. பேரனையாய்-குற்றமற்ற மாணிக்கம்போல்வாய். கறுப்பு-கோபம்.

சஙo. துப்புரவு - தூய்மை. தாழ்ப்பர் கொல்லோ - தங்கச்செய்வாரோ.

சஙஉ. "கொண்டானிற் றுன்னியகேளிர் பிறரில்லை" நான்மணி. ருச.

சஙங. தனகு - விடயக்களிப்பு; "தனகிருந்ததோர் தன்மையராகிலும்" தேவாரம்.

சஙச. திருவுமமிர்துந் தருங்கடல்போலும்: "அமுதமுந்திருவு முதவுதலா னும்...அளக்கராகியும்...கல்வி" கல்லாடம்.

தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல்.

சேதாம்பல் வாவித் துறைசைத் திரவியத் தியாகர்செய்ய
பாதாம் புயத்தைப் பரவப்பெற் றோர்பெறும் பாக்கியமின்
றோதா தவர்க்கில்லை யென்றுரைத் தேகின ரொள்ளழற்கான்
வேதா ரணியமன் னையுன்றன் மேல்வைத்த மெய்யன்பரே. (சஙரு)

கார்ப்பருவங்கண்டு தலைவிவருந்தல்.

கத்திகைக் கூந்தனல் லாயென்செய் கோவினிக் காத்துறைசைப்
புத்திர த்யாகரைப் போற்றார் மனத்திருள் போலக்கொண்ட
லெத்திசைக் கண்ணுமுற் றென்னை ருபிருண்ண வெய்தியதான்
முத்திறக் கல்விக் கடனீந்தப் போனவர் முன்னிலரே. (சஙசு)

தலைவியைத் தோழி ஆற்றுவித்தல்.

மகரக் கருங்கட லூடன் றெழுந்து வருவிடமே
நிகரக் குயின்வந்த தேதுவென் றேங்கினை நீவடபொற்
சிகரப் பொருப்புவிற் செம்பொற் றியாகர் திருத்துறைசைத்
தகரக் குழலணங் கேயன்பர் தேரின்று தான்வரற்கே. (சஙஎ)

---

## காவற்பிரிவு.



காவற்பிரிவு தலைவன் பாங்கிக்குஅறிவுறுத்தல்.

தேக்கந் தருவெள்ள மார்சடைச் செம்பொற் றியாகரரு
ளாக்கந் தழைத்த துறைசையன் னையநல் லறப்புறங்கள்
காக்கவு மல்லவை நீக்கவுஞ் செல்வது கட்டளையா
மூக்கம் படைத்தினி தாநாடு காவ லுரியவர்க்கே. (சஙஅ)

தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல்.

மலங்கா வகையுயிர் யாவையுங் காத்து வளர்துறைசைத்
தலங்காவல் கொண்டருள் செம்பொற் றியாகர் தமதருளா
லிலங்காவல் கொள்ளு நினைவின ராயினர் நீலமழைக்
குலங்காவல் கொண்டவைம் பாலெம் பிராட்டிநங் கொற்றவரே. ()

தலைவி கூதிர்ப்பருவங்கண்டு வருந்தல்.

கறைகொண்ட கண்டர் கனகத் தியாகர் கவின்றுறைசை
யிறைகொண்ட கோல்வளை மால்பொழிற் றிட்டபி னெஞ்சிநின்ற
வுறைகொண்டு வாடை யலைக்குமிந் நாள்சற் றுணர்ந்திலர்கொ
றிறைகொண்டு கோல்செலுத் தாநாடு காத்திடுஞ் சிந்தையரே. (சசய)

---

சஙசு. கத்திகை - பூமாலை. முத்திறக்கல்வி - இயலிசைநாடகம்.
சஙஎ. குயின் - மேகம். சசய. உறை - துளி.

தலைவியைத் தோழி ஆற்றுவித்தல்.

சொல்லும் பெரும்புகழ்ச் சொன்னத் தியாகர் துறைசையர்போ
லல்லுந் தியமலர்க் கோதாய் தழைக வடியுறையா
வொல்லுநர் வைத்தவு மொல்லார் விருது மொருங்குகொண்டு
வெல்லும் படைமுர சோடன்பர் தேர்மிசை மீண்டனரே. (சசக)

## தூதிற்பிரிவு.



தூதிற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

நீந்தா நெடும்பகை கூர்ந்திரு வேந்தர்க ணேர்ந்தமரின்
மாந்தா வகைசென்று மாற்றுதற் கேகி வருமளவுஞ்
சாந்தார் வனமுலை செம்பொற் றியாகர் தடந்துறைசைத்
தேந்தா மரைமுகத் தாள்கவ லாவகை தேற்றுகவே. (சசஉ)

தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல்.

போதார் புரிகுழற் பொன்னேவன் றொண்டர்க்குப் பொங்கிரவிற்
றூதாய் நடந்தவர் சொன்னத் தியாகர் துறைசைநமர்
கோதார் மிகைதணி யாவிரு கோக்கள் குறித்தசமர்த்
தீதாம் பகைதணித் தற்கேக லுற்றனர் சித்தம்வைத்தே. (சசங)

தலைவி முன்பனிப்பருவங்கண்டு வருந்தல்.

சுடுங்கார் விடமுண்ட சொன்னத் தியாகர் துறைசையொப்பாய்
கடுங்கா வலர்பகை நீக்கப் பிரிந்தவர் கண்டிலரோ
வொடுங்கா ரொடுங்கத்தென் றிக்கோட மேக முருக்கமலம்
படுங்கால மென்னக் கருகப் பெருகும் பனியினையே. (சசச)

தலைமகளைத் தோழி ஆற்றுவித்தல்.

அங்குங் குமமுலை மாதேவங் குற்றன ராழிவைய
மெங்கும் பொழிந்திடு முன்பனி நாளென் னிருதயத்திற்
றங்குந் துறைசைத் தியாகேசர் தாணிழ லார்வினைபோற்
பொங்கும் பகைமன்னர் போர்தணிப் பானன்று போனவரே. ()

## துணைவயிற்பிரிவு.



தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

இருந்துணை யாய்மன்னர் போர்முனை மேற்சென் றினிதினிங்கே
வருந்துணை யுங்கயற் கண்ணாய் துறைசையில் வாழ்ந்துயிர்கட்
கருந்துணை யாய்நின்ற கோமுத்தி யீச ரருளெனக்கை
தருந்துணை யாய்த்தைய லாள்வருந் தாவகை தாங்குகவே. (சசரு)

---

சசக. ஒல்லுநர் - நட்பினர். ஒல்லார் - பகைவர்.

சசங. வன்றொண்டர்-ஸ்ரீசுந்தரமூர்த்திநாயனார். கோக்கள்-அரசர்.

சசச. பனிக்காலத்தில் மேகம் தெற்கேசெல்லும்; "மங்குன் மாமழை தென்புலம் படரும், பனியிருங் கங்குல்" அகநா. உச.

தோழி அதற்கு உடம்படாமல் மறுத்தல்.

சேந்தற்கு மாமன் மகனர் செருவிற் றிகைக்குமெங்கள்
சாந்தத் தனத்திக் குதவிசெய் தாலென்ன தாழ்வுழைக்கன்
றேந்தத்தன் கோமுத்தி யீசன் றுறைசையெண் ணரின்வெம்போர்
வேந்தர்க் குதவிசெய் வான்பிரிந் தேகுமின் வேலண்ணலே. (சசஎ)

தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல்.

தீவாய வெஃகம் வலந்திரித் தேமன்னர் தெம்முனைமேற்
கோவாத முத்தனை யாய்படர்ந் தார்நமர் கொண்டலுலாஞ்
சோவா வடுதுறைச் சொன்னத் தியாகரைச் சூழ்கிலர்போன்
மேவா ரிடுநொச்சி யாதுகொ லாக விளைகின்றதே. (சசஅ)

தலைவி பின்பனிப்பருவங்கண்டு வருந்தல்.

குனித்தருள் கோமுத்தி நாதன் றுறைசைக் குரீஇக்குலமுந்
தொனித்திடுந் தம்பெடை யோடினங் கூடிபு துஞ்சிருட்கூர்
பனித்திர ஙேகவென் கண்ணுறங் காமற் பனித்திரங்கித்
தனித்திருந் தேங்குக வென்றுயிர்த் தாளனைத் தாய்சுமந்தே. (சசகூ)

தலைவியைத் தோழி ஆற்றுவித்தல்.

என்பனி யென்முதி ராமுலை கோமுத்தி யீசனன்பர்க்
கன்பனி மாசலை கேள்வன் றுறைசையை யாதரியா
வன்பனி யாயரைப் போலே நடுக்கஞ்செய் வாடைமிகும்
பின்பனி நாளில்வந் தார்முன்பு நம்மைப் பிரிந்தவரே. (சருO)

---

## பொருள்வயிற்பிரிவு.



பொருள்வயிற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

இந்நா னிலத்தில்லை யேமத்தின் மேம்பட்ட தீட்டிலது
தன்னா லெவருஞ் சிறப்பின்மிக் காவர் தடந்துறைசை
நன்னா வியங்குழ லாயொப் பிலாமுலை நாயகரும்
பொன்னாலன் றேபுகழ்ப் பேர்படைத் தாண்டனர் பொற்பரசே. ()

---

சசஎ. சேந்தன் - முருகக்கடவுள். மாமன்மகனர் - மன்மதன். உழைக் கன்று - மான்கன்று. மின்வேல் - ஒளியையுடையவேல்.

சசஅ. படர்ந்தார் - சென்றார். சோ, நொச்சி - மதில்.

சசகூ. குனித்தருள்-நடித்தருள்கின்ற. குரீஇக் குலம் - குருவியினினம். பனித்து - நடுங்கி.

சருO. என்பனி - என்னபனி. அன்பன் இமாசலை (உமை) கேள்வன். வன்பு அயியாயர் - வன்மையையுடைய அயியாயர்.

சருக. ஏமம் - பொன். புகழ்ப்பேர், சொன்னத்தியாகரென்பது.

பாங்கிமறுத்தல்.

நிரைக்கும் பகிரண்ட கோடியர் கோமுத்தி நின்மலனூர்
திரைக்கு மரிவளர் தென்னர சூர சிறையளிசூழ்ந்
திரைக்குங் குழலி யுரையாத் தனக்குன் றிரண்டுபெற்று
முரைக்குந் தனத்துக் கருஞ்சுரம் போக வுரைப்பதென்னே. (சருஉ)

தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல்.

தழலத்த மேந்திய செம்பொற் றியாகர் தமிழரசூர்
நிழலத்த மன்ன கபோலத்தி சீரத்த நேடிக்கொள்ளார்
விழலத்த மன்னரென் றெண்ணிவெண் டேரைவெம் மான்புனலென்
றுழலத்த நீந்தலுற் றருனே யேபொன்னென் றேதினரே. (சருங)

தலைவி இளவேனிற்பருவங்கண்டு வருந்தல்.

தைக்கின்ற வேற்கண்ணி தென்னர சூர்த்தம தன்பரைத்தாள்
வைக்கின்ற கோமுத்தி யீசர்த் தொழாத வரினமக்கோர்
திக்கின்று வேறினி யங்தோ தளிர்த்துச் சிறைநிறைந்த
கொக்கின் றலையிற் குயிலின மேறுபு கூவினவே. (சருச)

தலைவியைத்தோழி ஆற்றுவித்தல்.

தொம்மென வாட்டயர் சொன்னத் தியாகர் துறைசைநல்லாய்
நம்மநங் கன்வசந் தத்திரு நாளிது நாட்டெவரும்
வம்மினென் றுங்கவன் காகள மார்ப்பது வார்செவிகேட்
டிம்மெனு முன்னணைந் தார்பொருட் கேகி யிருந்தவரே. (சருரு)

தலைமகளைக் கலந்திருந்த தலைமகன் முகிலொடுமகிழ்ந்துகூறல்.

மருவளர் கோதை மயிலனை யாள்கொங்கை வண்டாளக்
குருவள ராக முயங்கினம் யாந்திருக் கோமுத்தியூ
ரொருவன் றிரவியத் தியாகேசன் பல்லுயிர்க் குஞ்சுரக்குந்
திருவருள் போல வினிப்பொழி வாழி செழுங்கொண்டலே. (சருசு)

## வாழ்த்து.



வாழி திருவா சூரொப் பிலாமுலை வாழிபொன்னி
வாழி திரவியத் தியாகேசர் பொன்னருள் வாழியன்பர்
வாழிய வெங்கள்பஞ் சாக்கர தேசிகன் மாமரபு
வாழி துறைசைத் திருக்கோவை வாழிய வாழியவே. (சருஎ)

## திருவாவடுதுறைக்கோவை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சருஉ. உரையாத்தனக்குன்று-கொங்கைகள். உரைக்குந்தனம்-பொன்.
சருங. அத்தம் - கை, கண்ணடி, பொன், காடு, அருநெறி.
சருச. கொக்கு - மாமரம், ஒருபறவை; "கொக்கின்மேற் குயில்கள்கூவுங் குளிர்பொழிற் குறியுஞ் சொன்னாள்" (வி. பாரதம், கீசகன். ருஎ) என்பது இதன் ஈரடிமடியை ஒத்திருத்தல் காண்க. சருரு. அவன்காகளம்-குயில்.

# அரும்பதவுரையின் அநுபந்தம்.



## விநாயகவணக்கம்.

க. நுதலைப்போன்ற பிறை. பிறையையும் அக்கின்கோவையையும் அணி பவன் இறைவன்.

உ. துணைவந்த விநாயகரென்பவர், திருக்கோயிற் கோபுரவாயிற்குத் தென் பாற் கோயில்கொண்டவர். அழகிய விநாயகர், தட்சிணாமூர்த்தியின் கீழ்பா லுள்ளவர்.

## நூல்.

க. கமலம், நீலம், முல்லை, கோங்கு, காந்தளென்பவற்றால் முறையே மருதம், நெய்தல், முல்லை, பாலை, குறிஞ்சியென்னுந் திணைகளைந்தும் கூறப் பட்டு, இந்நூல் ஐந்திணையொழுக்கத்தையும் புலப்படுத்துவதென்பதை விளக்கு தல் காண்க.

உ. பத்மநிதிமீதலமென்றதற்கு அமராவதியென்றேனும் அளகாபுரியென் றேனும் பொருள்கொள்க. அமோகத்தவர் - நிராசையை யுடையோர்.

ங. வாடாதபோது - அணிந்த மாலையிலுள்ள பூக்கள். இமையாடாத போது - கண்கள், நிலத்திற் சூடாதபோது - பாதங்கள். அழல் ஓடாப்பொற் பூண் - நெருப்பிற்காய்ச்சி ஓடவைக்கப்படாத பொன்னாலாகிய ஆபரணம். இவை தேவர்க்கே உரியன. ஈடு - ஒப்பு, பிறர்மனத்தைக் கவருந்தன்மை. வீடாவிளக்கு - இரத்தினதீபம்; வீடுதல்-அவிதல்; "அவன்...பாசறைக் கேற்று மணிவிளக்கோ" என்பர் பின்னும், சஉ; "சூடக்கண் டாயடிப் பத்மங்கள் பூவி னிற்சூடியபூ,வாடக்கண் டாய்வண்டு கூடக்கண் டாயிரு வாட்கணிமை, யாடக் கண் டாய்மன மேயிந்தக் கொம்ப ரணங்கல்லடீங், கோடக்கண் டாளுங் கலை சைத் தியாக ருயர்வரைக்கே" கலைசைக்கோவை, ங.

ச. தென் - அழகு, தென்னைமரம். பொன்னுழி, எழுவாய். கொன் - அச்சம். "அன்றுகண் டோகஞ் சமுத்தை யாழியி லம்புயன்மால்,சென்றுகண் டோதுந்தென் னூரர்த் தியாகர் திருமிடற்றி, லொன்றுகண் டோமற்றை யொன்றுவின் னுட ருலகிற்கண்டோ, மின்றுகண் டோநெஞ்ச மேயிவர் பார் வை யிரண்டினுமே" திருவாரூர்க்கோவை, ச.

ரு. வம்பிற் புதைக்குந் தனங்கள் - வீணே புதைத்துவைக்கப்படும் திரவி யங்கள், கச்சால் மூடப்பட்டுள்ள கொங்கைகள். வருவாய் - வரும்படியுமாம்.

சா. அன்னம் பேட்டுக்கு இறலவயருத்திப் பொருந்துந் துறைசையென் றது, யாமும் இவரை மகிழ்வித்துப் பொருந்தும்படி செய்யுமென்னுங் குறிப் புப் பொருளைத் தருகின்றது.

எ. தண்மை - ஒருவகைக்காலணி.

அ. கொல்லியம்பாவை - கொல்லிமலைக்கண் தெய்வத்தால் அமைக்கப் பட்டதொரு தெய்வப்பிரதிமை. இது மோகினிவடிவமென்றுங் கூறப்படும். கண்டார்க்குப் பெருங்காமத்தை விளைவித்து இறுதியிற் கொல்லுமியல்பையுடையது; தான் ஒருவகைத் துன்பமும் உறாதது; இதனை நற்றிணை, கஅ௫, குறுந்தொகை; அகூ, சீவகசிந்தாமணி கூகூஎ-ஆஞ் செய்யுட்கள் முதலியவற்றால் உணர்க.

கூ. "கொந்தார் குழன்மணி மேகலை நூனுட்பங் கொள்வ தெங்ஙன்" (வெங்கைக். சூ0எ) என்பது இங்கே அறியற்பாலது. அஃதோ-ஐயோ. பைத்த பாயிருள் - மிகப்பரவிய இருட்டு; ஒருபொருட் பன்மொழி.

க0. பதமும் - பாதமும் பதவியும்.

கஉ. வேட்கைக்கடலைத் தனக்குடங்கொண்டு நீந்துவமென்க; "கோக்கடல் வீழ்ந்து அவா அலையாற் சுழல்வேனுக்கு அவள் தனக்கலன் அன்றி வேறுபற்றில்லை" என்பர் பின்னும்; ௫ங; "போர்நாடு காமவெள்ள நீந்தவொரு புணையின்றிச், சீர்நாடு மாதர்தனக் குடங்தேடித் திரிவாற்கு, வார்நாடு தடைதீர்ந்த மலைநாடு வாய்த்ததால்" (குற்றலப். மந்தமாருத. சஅ) என்பது இதனுடன் ஒப்பிடற்பாலது.

க௫. கா - காவில்.

கஎ. கோணைப்படை - மாறுபாட்டினையுடைய படை; ஐ, சாரியை. குதுகுதுத்தால்-ஆசைப்பட்டால்; "வேசனை நாற்றங் குதுகுதுப்ப" (பரி.உ0:க௩); "தேவர்களுங் குதுகுதுப்ப" (காஞ்சி. நகரேற்று. கச௫.) நாணற்கபாடம்-நாணமாகிய கதவு; "நாணெடுங் காவ லுடைப்புண்டதால்" என்பர் பின்னும்; உ0.

கஅ. நீரை அரசிலையால் தோய்த்துவீசுதல் மங்கலமரபு. வெளிதாய் - வெள்ளிய நிறமுடையதாய்.

ககூ. என்றூழ் - சூரியன். நிலாக்கடிந்ததென்க. சூரியனுல் நீக்கப்படாத அகவிருளை நிலாநீக்கியது மிக்க வியப்பென்றபடி. விம்மிதம் - விஸ்மிதமென்பதன் திரிபு.

உ0. கன்னி இஞ்சி - அழியாதமதில். இவர் என்றது தலைவியை.

உக. சட்டகம் - உடம்பு. முருக்கின் அலர்போன்ற வாய்.

உ௩. யானையென்றது கொங்கைகளை. நான்புனைய வாய்த்ததென்க.

உச. அஞ்சேல் - அஞ்சாதே. அணியியல் - அலங்காரஞ்செய்யுமிலக்கணம்; ஒரு நூலுமாம்.

உகூ. தென்கடலுருளில் வடகடலச்சு இயைந்தென்ன என்பது, "தென் கட லிட்டதோர் திருமணி வான்கழி, வடகட னுகத்துளை வந்துபட் டாங்கு" (பெருங். க. ௩உ: கஎ - கஅ) என்பதில் வேறுவகையாகக் கூறப்பெற்றுள்ளது.

உஅ. இன்னேவருவல் - இப்பொழுதே வருவேன். பறவாக்குளவியென்பது மலைமல்லிகையென்று பொருள் தருதலை வெளிப்படையென்பர். குளவியை வண்டென்னும் பறவையோடு கட்டியென்பது மற்றொருபொருள்.

௩0 பணிக்காப்பார் - சர்ப்பகங்கணத்தையுடையவர். கருப்புமுத்து-கரும்பின்முத்து. செந்நெலும் கரும்பும் மருதநிலத்திற்குரியன; "செந்நெல் செங்கருப்

பம் பயிரிற்சிறந்த துறைசை" என்பர் பின்னும்; ௩௩; "நிலத்திற் கனியென்ய நெல்லுங் கரும்பும்" நான்மணி. ௯.

௩௧. "இல்லத்துக் காழ்கொண்டு தேற்றக் கலங்கிய நீர்போற் றெளிந்து நலம்பெற்றான்" (கலி. ௧௪௨), "இல்லின் படுகாழ்ப் படுத்துத் தேய்வை யுறீஇக், கலுழி நீக்குங் கம்மியர் போல" (பெருங். க. ௩௫: ௨௧௫ - ௨௧௭), "மண்மயக்கந்தேற்றுவித்தான் மாற்றுதல்போ லாரியனு, லுண்மயக்கந் தேற்று வித்தான்" (வேங்கடவெண்பா, ௪) என்பவை இச்செய்யுளின் பின்னிரண் டடிகளுடன் ஒப்பிடற்பாலன.

௩௨. முத்துவடத்தையணிந்தமலை - கொங்கை. நடு - இடை.

௩௩. ஆரவண்டல் - முத்துக்களாலாகிய வண்டல்.

௩௪. தியாகேசர் காட்சி - தியாகேசரது பந்தர்க்காட்சி; "தியாகர் வளர் துறைசைக் காட்சியின்" என்பர் பின்னும்; ௧௭௦.

௩௫. துணைவிழி தோட்டைக்கடந்து காட்டி உலவுமென்க.

௩௬. கோமளம் - மனத்துக்கு இன்பஞ்செய்யும் அழகு; என்றது, தலை விளை. உணர்ந்தும் - அறிந்தும்.

௩௭. "முடிக்கத் தகுமுன் னரசிலை யோடு" என்பர்பின்னும்; ௧௪௦. ஈன் அரிது - பெறுதல் அரிது.

௩௮. இருவர் - தலைவியின்தாய்தந்தையர். ஏக்குற - ஏக்கமுற; ஏக்கற வெனப்பாடங்கொண்டு இளைத்து இடையவென்று பொருள் கூறுதலும் பொருந்தும்; "கடைக்கணேக்கற" சீவக. ௧௬௨௨.

௩௯. அற- மிக. கங்குல் நீளும்.

௪௧. சேறும்- செல்வேம். வருதி - வருவாய்.

௪௨. அவன் பாசறை- சோலை.

௪௩. 'நீக்கற்று இரண்டற்ற நேசமொடு......கலந்து புணர்ந்தது' என் பது, "சொற்பா லமுதவள் யான்சுவை யென்னத் துணிந்திங்ஙனே, நற்பால் வினைத்தெய்வந் தந்தின்று நானிவ ளாம்பகுதிப், பொற்பா ரறிவார் புலியூர்ப் புனிதன் பொதியில் வெற்பிற், கற்பா வியவரை வாய்க்கடி தோட்ட களவகத் தே" (திருச்சிற். ௮) என்பதன்பொருளை ஒத்துவந்தது. பொற்கென்ற-பொன் னிற முற்ற; இது புற்கென்ற எனவும் வழங்கும்.

௪௪. முக்கண் நக்கர். அணியிழை, விளி.

௪௫. மன் திருவாணி. வள்ளல் - தியாகராசர். பின் - பின்னிய. கண்ட- படைத்த. தோகை - மயில்.

௪௬. இலதால் - இன்மையால். பெண்களின் - பெண்களைப்போல. சசி- இந்திராணி.

௪௭. திருத்தத்துறைசை - புண்ணிய தீர்த்தங்களையுடைய துறைசை; "திருக்காவிரித்திருத்தம் படிந்தோ" (எ௩) என்பர்பின்னும்; "திருத்தயாத்திரை யதிக மவற்றிகஞ் சிவனுருவாந், திருத்தமாங் கங்கைமுதற் றிருநதிக டனித் தனி போய்த், திருத்தமா டுவ தரிது" (திருவிளை. எழுகடல். ௯.) 'கல்வியும் ஈா

ருரிப்பவன்' என்பது ஒருபழ்மொழி; "கன்னு ருரித்த கனியே போற்றி", "கன்னு ருரித்தென்ன வென்னேயுந்தன் கருணையினுற், பொன்னுர் கழல்பணித் தாண்ட பிரான்", "கன்னு ருரித்தென்னே யாண்டு கொண்டான்" என்பவை திருவாசகம்.

சஅ. தெய்வப்படை - தெய்வாத்திரங்கள். செந்தமிழ்வடித்தோ - செந்த மிழ்நூல்களை ஆராய்ந்தோ; "கூடலி னுய்ந்தவொண் டீந்தமிழின், றுறைவாய் நுழைந்தனையோ" (திருச்சிற். உ௦.)"தெய்வப் பாவலர்தா,முன்செய்த நூலின் முறைதெரிந்தோ" அம்பிகாபதி. ச௦.

சகூ. பால் நத்து-வெள்ளிய சங்கம். அனல் அரக்கு ஆகி. இது இலக்கோ- இது லக்ஷியமோ.

ருக. காணுய் - கண்டாயில்லை; "நடுக்கண் டனையல்லை கொங்கைகண் டாயல்லை நண்பவென்ற, விடுக்கண் டனேயிப் படியோ தவிர்ப்பது" (புகலூ ரந்தாதி.)"பூணுர மென்முலே யின்பெருங் காட்சியும் பொய்யிடையின், காணு மையுங்கண் டனேயாயி னண்ப கழறலேயே" (வெங்கைக். சசு.)

ருஉ. தேசிகத்தைத் தேசென்பதன் திரிபாக்கி ஒளியென்றலும் பொருந் தும்; "பல்லினத் தேசிகம்படத் துடைத்து" (சீவக. கசஅ௦) என்பதன் பொருளைப்பார்க்க.

ருங. கா-சோலை. அவா அலை-ஆசையாகிய கடல். கலன்-நீந்துதற்குரிய குடமுமாம்.

ருஎ. திருமாலாகிய விடையென்பார் 'துளவே யணிவிடை' என்றார். தள வே நகை - முல்லையரும்பே பல். தந்துஅளவே இடுகிடை -நூலின் அளவாகவே உள்ளது இடை; இடுகு இடை - குறைந்த இடுப்பு.

ருஅ. நின் ஆவிக்கு ஆவியை - உன்உயிர்க்கு உயிர்போன்ற தலைவியை. நிற்றி-நிற்பாய். அன்னம் தமயந்தியின்பால் தூதுசென்றுவந்த அன்னப்பறவை. தரித்து - துன்பத்தைத்தாங்கி.

ருகூ. மகளிர் நடைக்கு மயிலின்நடையை உவமை கூறுதல் மரபு; "மயில் கண் டன்ன மடநடை மகளிர்" (றநுகு. உ௦ரு) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க (பத். உ-ஆம் பதிப்பு.)

சு௦. அனிச்சம் பொருத அடித்தாமரையிவை: அனிச்சம் - அனிச்சமலர்; "அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத, ரடிக்கு நெருஞ்சிப் பழம்" (திருக் குறள், ககஉ௦); "பஞ்சி யடரனிச்ச நெருஞ்சியீன்ற பழமாலென், றஞ்சு மல ரடிகள்" (சீவகீ. ருசக.)

சுக. வாழையென்றது துடையை. மதி - புத்தி, சந்திரன். இதன் பின்னடிகள், "துடைவாழை மேன்மட வாரல்குற் பாம்பு தொடமயங்கி, நடை வாய் பிணமெனப் பட்டார்" (நால்வர்நான்மணி. உசு) என்பதை ஒத்து வந்தது.

சுங. தாயினு மின்பருள் செம்பொற் றியாகர்:"தாயிற் சிறந்த தயாவான தத்துவனே", "தாயிற் பெரிதுந் தயாவுடைய தம்பெருமான்", "பானினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்து......புறம்புறந் திரிந்த செல்வமே" என் பவை திருவர்சகச் செய்யுட்கள். 'தடந்துறைசைக், கோயிலு மெந்நெஞ்சும்

கொண்டோர்: "அடியேனுடைய, மனமுந் துறைசையும் வாழ்மாசி லாமணி" என்பர்பின்னும்;கசஉ;"சிறைவான் புனற்றில்லைச் சிற்றம் பலத்துமென் சிந்தை யுள்ளு முறைவான்" திருச்சிற். உ௦.

௬௪. தாரகை-நட்சத்திரம்; என்றது தலைவியை. பக்கம் - அன்பு, பக்ஷம். தலைவனைச் சோமனென்றது சௌமியகுண முடையனாதல் பற்றி. சௌமியம் - சாந்தம். இப்பெயர் சோமிய மெனவும் வழங்கும். "தூாலங்கிக மூஞ் சோதிச் சோமியமடைந்து நின்றான்" (வி. பாரதம். கரு ஆம்போர். க௬.)

௬௬. அரக்குங் கறுக்குநற் செவ்வாயென்றது வாயின் செம்மை மிகுதியைக் கூறியவாறு; "முருக்கி னிதழைக் கருக்குவிக்கு முறுவற் செவ்வாய்த் திரௌபதியும்" (வி. பாரதம், துருவாச. க௦) என்றார். சஞ்சீவினி - மிருத சஞ்சீவினி யென்னும் ஔஷதி; "நற்சஞ்சீவனி கண்ட செம்பொனிமயாசலம்" (கக௩) என்பர்பின்னும்.

௬எ. கோடு இவர்கின்ற தேன்வாரி - கொம்பிற் பரக்கின்ற தேன்கடலை. "கோலாறு தேன்பொழிய" (பெரிய. மானக்கஞ். க), கோம்புத்தேன் எல்லாத் தேன்களிலும் சிறந்ததென்பர்; "கோற்றேன் கொண்டு செய்தனன்", "கோற் றேன் மொழிக் கிள்ளாய்", "கோற்றேனெனக் கென்கோ" திருவாசகம்.

௬அ. படையார்விழி: அண்மைவிளி. அறல் - நீர்.

௬௯. ஏர் உதரம் - அழகிய வயிறு. புரை - குற்றம். ஆல் - ஆலிலை.

எ௦. குவளைமலரின் செழுமை கூறுவார் 'மடையார், குவளை' என்றார். "மடைத்தேங் குவளைக்கண்ணாய்" என்பர்பின்; ௩கரு; "மடையின்றி நீணெய் தல்வாடும்" நான்மணி. சக. வாரும் - வாருங்கள்.

எக. எல்லா எழுத்திற்கும்நாயகமாம் அவ்வெழுத்தென்றதை,'அகர முதல வெழுத்தெல்லாம்" (திருக்குறள், க) என்பது முதலியனவும் அவற்றின் உரைகளும் விளக்கும்.

எஉ. ஒருக்காலும் - ஒருபொழுதும்; ஒருகாலென்பது ஒருக்காலென்றும் வழங்கும்; "அருட்காமக் கொடிபாகன் றிருவாணை சிதம்பரங்கண் டவர்க்கு முத்தி, யொருக்காலன் றிருக்காலு முக்காலு முண்மையீ துண்மை யாமென், செருக்காலீ துரைத்தேனேற் கணப்போதிற் சிரமிற்றுச் சிதைக முன்னை, யிருக்காதி மறைமொழிந்த திப்பரிசென் றான்சுருதி யெல்லாம் வல்லான்" சிதம்பரபுராணம், துன்மத. கஎ.

எ௩. "நாற்றமுந் தோற்றமு மொழுக்கமு முண்டியுஞ்,செய்வினை மறைப்புஞ் செலவும் பயில்வுமென், றிவ்வகை யேழினு மையமுற் றோர்தலும்" என்பது, நம்பியகப்பொருள், ரு. க௩௬.

எஎ. குருக்கும் - தோன்றும். வேர்வு - வேர்வை.

எஅ. சேப்பு - செம்மை; "சிகைகிடந்த வூடலிற் செங்கண்சேப்பூர" பரி. எ: எ௦. பூமத்தர் - ஊமத்தம் பூவையணிந்தவர்; "மத்தமும் வன்னியு மணிந்த சென்னிமேற், கொத்தலர் கொன்றையர் கொள்ளிக் காடரே" தேவாரம். பா - பரப்பு.

எ௯. துப்பின்-வலியால். "தீவா யுழுவை கிழித்ததந் தோசிறி தேபிழைப் பித், தாவா மணிவேல் பணிகொண்ட வாறின்றொ ராண்டகையே" (திருச்சிற். எஉ) என்பதும் அதன் உரையும் இச்செய்யுளின் பொருளை விளக்கும்.

அ௦. முத்தி யென்னுஞ் சொல்லை மங்கையெனப் பெண்பாலாக்கியது, வடமொழிமுறை பற்றி; "முத்தித் திருவை முயங்க நல்குங் கயலார் பெருந் தடங் கண்ணிபங்கா", "நரைக்குழன்முத் தித்திருவை முயங்கிடவுங் கட வேன் கொல்லோ" காசிக்கலம்பகம். உ௨, ௩அ.

அக. எழுதரும் பாவை - எழுதுதற்கரிய பாவைபோல்வாளை. சதிர்ப்பாடு-திறமைப்பாடு.

அ௩. மார்ராயம்-சிறப்புமாம்; சிலப். உ௫: கசஉ - ஆம் அடியின் அடி குறிப்பைப் பார்க்க.

அ௫. சுந்திதனை உரைபாடிலிரென மாற்றிப் பொருள்கொள்க. காயா மலர்க்குழலீர் - காயாமலர்போன்ற கூந்தலையுடையீர்; "காசைசேர் குழலாள்", "காசைசெய் குழலுமை" என்பன தேவாரம்; "பாயாத மானைரம் பாலும் பசுந்தோளுங், காயாவே யொக்குங் கலைசையே" (கலைசைச்சிலேடை. கஉ.) வேங்கைமரத்தைப் பாயாத வேங்கையென்றது வெளிப்படை.

அசு. எத்திட்ட - வஞ்சித்த; "எத்தாற் பிரிந்தவர்" (உ௬க) என்பர்; "வந்தியை யலைப்பான் வந்த வெத்தனே" திருவிளை. மண்சுமந்த. ௬௩.

அஅ. எய்த எய்த - அடைதற்கு அம்பை யெய்த. யானையின்பெயராகிய அத்தியென்பதனை 'ஒற்றிடையாரும் அதி' என்றது எழுத்துப் பெருக்கமென் னுஞ் சொல்லணி.

அகூ. வரையாரமுதனையீர் - அலையிற்றோன்றிய அமுதையன்றி மலையிற் றோன்றிய அமுதைப்போல்வீர். வட்கும்-கெடும்; "வட்கயான் பெரிது முட்கி" சீவக. ௬௦௩.

கூக. ஆறேந்து சென்னியர் - கங்கையையணிந்த தலையையுடையர்; ஏந்திய ஆறுசென்னியை யுடையரென்றுமாம்; "முடியாறு கொண்ட துறைசையெங் கோமுத்தி முத்தர்" (௩௦௦) என்பர்; "அறிஞராயோர், சிந்திக்குந் தனது தொல்லைத் திருமுக மாறுங் கொண்டான்" (கந்த. திருவவதார. ௬௩); "ஐந்து முகத்தோ டதோமுகமுந் - தந்து, திருமுகங்க ளாறுகிச் செந்தழற்க ணாறு, மொருமுகமாய்த் தீப்பொறியா றுய்ப்ப" (கந்தர்கலி. எசு - எ) என்பவற் றாலுமுணர்க.

கூஉ. வரியார் அதள் - புலித்தோல். கண்டுகொண்டாடுமெனவும், கண்டு கொண்டு ஆடுமெனவும் பிரிக்க; ஆடுதல் - சொல்லுதல், கூடுதல்.

கூ௩. ஏ - அம்பு. மருளா - மயங்கி, ஏய்ப்ப வந்ததோ.

கூ௫. மா இலை அம்பு - மாவிலையாகிய அம்பு, பெரிய அலகையுடைய அம்பு. சேண் - நெடுந்தூரம். சிங்க சாம் - நாசிங்காத்திரம்; இதனை எய்து இறைவன் யானையைவென்றமை திருவிளையாடலில் யானையெய்தபடலத்தால் அறியலாகும்.

கூகூ. இரலை - மான். கோட்டம் - நீர்நிலை. கூட்டுறவு - கூடுதல்.

கூஅ. மான் அத்தர் - மானைத்தாங்கிய கையையுடையவர்.

௬௦௦. கல்லாரம் குற்று - செங்கழுநீர்மலரைப் பறித்து.

௬௦௨. சூடாமணி - முடிமணி. இது சூளாமணியெனவும் வழங்கும்; "சூளாமணியும்பர்க் காயவன்" திருச்சிற். ௬௭.

௧0௫. வடி - மாவடுவின்பிளவு; "வடிக்கண்ணிவை" திருச்சிற். ௩௧.

௧0௬. கதை-தண்டாயுதம். யாதுன்பு-மிக்கதுன்பம். ஏதும்-சிறிதும்.

௧0௭. தஞ்சமற்று-பற்றுக்கோடு அற்று. மலர்மாலையிற் பூக்களை எழுத்து வடிவுபடவும் சொல்வடிவுபடவும் வைத்துத்தொடுத்தல் மரபு; "மருடரு மல்லி கைமாலை வல்லவள், பொருடகத் தொடுத்தன" (சீவக. ௨௬௫0); இவ்வழக்கம் முன்பு உண்டென்பதைப் பெருங்கதையிற் பரக்கக்காணலாம்.

௧0௯. தண்ணெல்லாம் - தண்மையெல்லாம்.

௧௧0. பட்டாங்கு - உண்மை; "பட்டாங்கறிய" பு. வெ. ௧௭௪.

௧௧௧. விற்படும் வெப்பு - வெயில். வேட்டு - மணஞ்செய்து.

௧௧௨. வெம்மாலை - வெவ்விய மாலைக்காலம்.

௧௧௬. துய்ய - தூய; "துய்யசெம்பொற் கோயிற் சுடரெறிப்பக் கண் முகிழ்த்து, வெய்யவன்றேர் மாவிடறும் வேங்கடமே" வேங்கடமாலை, ௬.

௧௧௭. நடையால் அன்னமன்னாள். ஏமமடல் - இன்பத்தைத் தருவதா கியமடல், "காம முழந்து வருந்தினார்க் கேம, மடலல்ல தில்லை வலி" (திருக் குறள், ௧௧௩௧); "பெருந்தாரை வேல்விழி தந்தவெங் காமப் பிணிதனக்கு, மருந்தா வதுநெஞ்ச மேயில்லை வேறு மடலன்றியே" தஞ்சை. ௧0௧.

௧௧௯. தமதுகருத்து முற்றுப்பெறாதவர்கள் மறுபிறப்பிலாவது அதனை யடைய நினைந்து மலையேறிவீழ்தல் முதலியனசெய்தல் பண்டைக்கால வழக்க மாதலின், 'பறம்பேறியும் பாய்வர்களே' என்றான்; "என்றலைவனை நணிகா ணேன், றீயில் வீழ்கிலேன் றிண்வரை யுருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே" (திருவா. திருச்சத. ௩௬); 'அருவரை பாய்ந்திறுது மென்பார்பண்டு' (பு. வெ. ௬௪); "மாமடலூர்வர் தவிர்ந்துபின்னும் வரையூர்வர்"(தஞ்சை. ௧0௨); "வஞ் சவினைக் கொள்கலனா முடலைத் தீவாய் மடுக்கிலேன் வரையுருண்டு மாய்ப்பே னல்லே, னஞ்சொழுகு வாளாலுங் குறைப்பே னல்லேன்" (திருவிளை. வாதவூ ரடிகளுக்கு. ௫௫). கிழி - கிழித்ததுணி.

௧௨0. எருக்கும் என்பும்; "நாளைவெண் பூளை முகிழெருக்கோ டென் பணிவேன் மடன்மேல் வருவேன்" தஞ்சை. ௧0௩.

௧௨௧. துவ்வாவிடம் - பிறரால் உண்ணப்படாதவிஷம். படம் - ஆடை.

௧௨௩. குடம்பையுள் ஆர் இறகு அன்றிற்பிள்ளையும். தூக்கணத்து ஒண் சினை - தூக்கணங்குருவியின் முட்டை.

௧௨௪. காக்கையைக் குயிலுக்குச் செவிலித்தா யென்றல் மரபு; "வருந்தீ யீன்றாண் மறந்தொழிந்தாள் வளர்த்தாள் சொற்கேட் டில்கடிந்தாள், ......கருங்குயிலே" (சீவக. ௧௬௬௧); "உயிர்த்த பொழுதே நின்குரல்கே ளாமு னேடிற் றீன்றதாய், நயத்தின் வளர்த்த தாய்குரல்கேட் டலுமே நடுங்கத் துரந்ததால்" (பிரபுலிங்க. பிரபுதேவர். ௬௩.) புல்லார்: சிலேடை.

௧௨௫. "கூறொரு பெண்ணையே கூட வேண்டுவார், வேறொரு பெண் ணையே வெட்டு வார்கொலோ" (௭௬) என்றார் அருணைக்கலம்பகத்திலும்.

௧௨௬. "கனவரும்பா" (தஞ்சை. ௧0அ) என்னுஞ் செய்யுளைப் பார்க்க.

௧௨௭. சிங்கக்குழவி மிக்கஇளமையில் எதிர்ப்பட்ட யானையை அடுமென் பதை, "ஆளி நன்மா வணங்குடைக் குருளை, மீளி மொய்ம்பின் மிகுவலி செரு

க்கி, முலைக்கோள் விடாஅ மாத்திரை ஞெரேரெனத், தலைக்கோள் வேட்டங் களிறட் டாஅங்கு" பொருந: கஙக-சஉ.

கஉஅ. நடைசெய்யாள் - நடத்தல் செய்யாள். செய்யாள் செய்யா ளென்றது மடக்கணி.

கஙo. 'விண்ணம் புலி' எனவும் பாடம். ஏலுமோ - பொருந்துமோ; ஏல், பகுதி; "பெருமைக்கும் வாய்மைக்கு மேலாது நீ கொண்ட பெற்றிமையே" (உகூo) என்பர் பின்னும்.

கஙக. இதன் பின்னிரண்டடிகள், "வெந்தபுண் வேலெறிந் தற்றால்" (கலி. அங), "வெந்த புண்ணிடை வேல்பட்ட வெம்மையான்" (கம்ப. இராவணன்சோக. கo), "வெவ்வே லெறிந்த விழுப்புண்ணின் மீட்டும் வெதுப் பியதோர், செவ்வே னுழைப்பவர் சிலமன்றே" (தஞ்சை. கககங) என்பவற்றின் கருத்தைப் பெற்றுவந்தன.

கஙஉ. தொன்னோய் - ஆணவமலமாகிய பிணியை.

கஙச. அருள் - ஆயிரம் பொன்னை அருளிய. வீழியஞ் செங்கனி வாயாள் - சிவந்தவீழிப்பழம்போலும் வாயினையுடையாள்; "வீழிவாய் மடமயில்" (நைட தம், நகர்நீங்கு. கூ); வீழியென்பது விழுதியென இக்காலத்து வழங்கும்.

கஙரு. குளிர்தல் - தங்குதல்; "கோமுத்தி யீசர் குளிர்துறைசை" (உஎo), "குறிதாம் பிறைமுடிக் கோமுத்தி யீசர் குளிர்துறைசை" (ஙகசு) என்பர் பின்னும்; "கூத்தாடுங் குணமுடையோன் குளிருங்கோவில்" தேவாரம்.

கஙசு. மூங்கில்; இச்சொல் உந்தூழெனவும் வழங்கும்; "ஊழுற் றலமரு முந்தூழ்" (மலைபடு. கஙங). ஏலம் - மயிர்ச்சாந்து.

கஙஎ. சுரும்பாடு தும்பையர்: தும்பையில் வண்டு மொய்த்தல் இறை வன் அருளைப் புலப்படுத்துகின்றது; "வண்டுமொய்த் தாற்றும்பிண்டி" (சீவக. உஎக) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

கஙஅ. குடங்கைக் கடங்காவிழி: "குடங்கையி னெடிய கண்ணால்" சீவக. கஉகூo.

கசo. குளகக்கவி - பலபாட்டுக்களை ஒருவினையால் முடிப்பது; "குள கம் பலபாட் டொருவினை கொள்ளும்" (தண்டி. பொது.) தழையை இலையோடு முடித்தல் வேண்டுமென்பதில் தழை இலையென்னுஞ் சொன்னயமும், தேற்ற வினையுங் காண்க.

கசஉ. 'என்மனமுந் துறைசையும் வாழ்': கூங-ஆம்பாட்டின் குறிப்பைப் பார்க்க.

கசங. அணைத்த நாயகனார் - அணைத்தெழுந்த நாயகனார்; "ஆனார் தவச னணைத்தெழு நாயகன்" (ஙஅரு) என்பர் பின்னும்; அணைத்தெழுந்த நாயகர் திருக்கோலமுமாயென்றது எப்படியும் உன்னை அடைந்தேவிடுவாரென்பதைப் புலப்படுத்திநின்றது.

கசச. அம்பல் - சிலரறிந்துகூறும்பழிமொழி. தீங்கொடும் இனியென்னை விடுப்பாய் - தீமைகைப்பொறு, எனனை விட்டுவிடு. [என்று?

கசரு. வேய்வந்த தோள்: வந்த-ஒத்தவென்னும் பொருளது. மறுத்தது

கசசு. வன்னித்தழை - வன்னிபத்திரம்; "வண்டணை கொன்றை வன்னியு மத்த மருவிய கூவிள மெருக்கொடு மிக்க, கொண்டணி சடையார்" தேவாரம்,

கசஎ. பெரியோர்களளித்த பொருளை யானையிலேற்றி ஊர்வலஞ்செய்வித்து அப்பால் ஒருவர் அணிந்துகொள்ளுதல் மரபென்பதை இச்செய்யுள் புலப்படுத்துகின்றது.

கசஅ. ஆரத்தின் - முத்துக்களையுடைய. பொழிற்கு - பொழிலின்கண்; உருபுமயக்கம்.

கசகூ. ஆவி மூழ்கி - வாவியில்மூழ்கி; நீராடி. அலர் குற்று - பூக்களைப் பறித்து. சிலம்பெதிரகூய்-மலையெதிரொலிக்கூவி; மலைமுழையில் எதிரொலியுண்டாகும்படி ஒலித்தலும் பாடுதலும் மகளிர் விளையாட்டினுள் ஒன்று; "சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச், சூரர மகளி ராடுஞ் சோலை" (முருகு. சo-சக); "நாமாவி மூழ்கி நறுமலர் குற்றுநந் தாவனத்துத், தேமா விளந்தளிர் செவ்வனங்கொய்து சிலம்பெதிர்கூஉய்,வாமா னெடுங்கண் மடந்தைநல் லாய்தஞ்சைவாணன் வெற்பிற்,பூமா தவிப்பந்தர் வாய்விளை யாடுகம் போதுகவே" தஞ்சை.கஙக.

கருo. உன் இன்மொழிக்கு.

கருக. துறக்கம் - சுவர்க்கம். பாரிசாதம் - ஐந்தருவில் ஒன்று. காமவல்லி - கற்பகதருவிற் படர்ந்துவளருமொருகொடி.

கருஉ. உலவாக்கிழிச் செம்பொற்றனம்-கெடாத ஆடையில் முடிந்துள்ள செவ்விய பொன்னுகிய பொருள்; 'உலவா' என்பது தனத்திற்கு அடை; தோணிபுரத்து இறையவனூர் - திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்; "எழிற்றுறைசைக், கயலாய கண்ணிக்குச் சொன்னத தியாகரிற் காணநல்க" (உருக) என்பர் பின்னும்.

கருஙு. ஆயந்தன்னை எய்துக என்க.

கருச. வடியிட்ட தேன் - வடித்ததேன். இணை - ஒப்பு. தோன்றிப்போது - காந்தட்பூ. கணபடியிட்ட - கண்ணுக்கு ஒப்பாக அமைக்கப்பட்ட; படி - பிரதிமையெனபதன் சிதைவு; "படிச்சந்தமுமிது" என்பர்; திருச்சிற். ௯உ.

கருரு. தாவு - உறைவிடம்; வி. பார. காண்டவ. சரு, சகூ.

கருஎ. "பிறவா வடிவன் றிருவெங்கை மேவும் பிரானெடுபோ, யுறவாருயிரும் வெயாக்குஞ் சததியை யொப்பவன்று, குறவாணர் தங்கண் மடமாதை நின்னெஞ்சும் கூட்டுமென்னை,மறவா திரு மன்னவா" (வெங்கைக். கசஉ),"தென்னையுறக்கோண முதற்குத வீற்றையுஞ் சேர்தனிச்சொ, றன்னையு நாப்பணின்றே கூட்டு மாசெனத தண்மணியும், பொன்னையும் வீசும் விநாயக பூபன் பொருப்பிடத்தில, நின்னையு மின்னையுங் கூட்டுமென்னையு நினைந்தருளே' (வியாசைக். கசச) எனபவற்றுள பொருள்கள் இச்செய்யுளிற்கூறிய சாரியை யுவமத்தை ஒத்து விளக்குகின்றன.

கருகூ. விடாய் - தாகம். உம்பருண் - அமிர்தம்.

கசூo. ஓதுவாரென்பவர்கள் சைவவேளாளர்களில் தேவாரங்களைப் பண்ணோடு ஓதும் ஒரு பகுப்பினர். துறைசையூரோதுவாரென்பதற்குத் துறைசையூரா ஓதுவாரென்றும், துறைசையிலுள்ள ஓதுவாரென்றும் பகுப்பினரென்றும் பொருள்கொள்க. மாலை - பூமாலை, மாலைக்காலம்.

கசூக. வளை - சங்கம். சங்கத்திற்குக் குடம் உவமை; "குடவளைக் குலம்" (நைடத. நகர. க.) மாலைக்காலத்தில் கோயில்வாயில்களிற் சங்கமூதுதல் மரபாதலின், வளையூதாலிகூர் மாலையெனறார்; "மல்லிகைய வெண்சங்கா

வண்டே வான்கருப்பு, வில்லி கணைதெரிந்து மெய்காப்ப - முல்லையெனு, மென் மாலை தோளசைய மெல்ல நடந்ததே, புன்மாலை யந்திப்பொழுது" (நள.சுயம். கூகூ.)வடவாநலம்-வடவைத்தீ. சூரியன் தேரிற்கட்டிய குதிரை ஒன்றென்பர் ஒரு சாரார்; ஏழென்பர் ஒருசாரார்; 'பச்சைமாவினமே' என்றதனால் இந்நூலாசிரியர் ஏழென்னும் கருத்தினரென்று தெரிகிறது; "இரவியந்தேரேழுமா விறுமாப் பற" (உகூச) என்பர் பின்னும்; "பச்சைமா வேழு மேறப்போ யாறு மேறினர்" கம்ப. கையடை. உரு.

கசூஉ. ஐம்புலன்களு மாரவினிதருந்தி: "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடி கண்ணே யுள" (திருக்குறள், கக0க) என்பதும், "ஈண்டு இன்பமென்றது, ஒருகாலத்து ஒருபொருளான் ஐம்புலனும் நுகர்தற்சிறப்புடைத்தாய காமவின்பத்தினை; இச்சிறப்புப்பற்றி வடநூலுட் போசராசனும் 'சுவைபல வென்று கூறுவார் கூறுக, யாம் கூறுவது இன்பச் சுவை ஒன்றனையுமே' என இதனை மிகுத்துக் கூறினான்" (திருக்குறள், களவியல், அவதாரிகை) என்பதும இங்கே அறியற்பாலன.

கசூரு. சூளாமணி - முடிமணி. வாளார் மடற்கண்டல்-வாளரம்போன்ற மடலையுடைய தாழையின். கடல் இரவில் அடங்காமல் ஒலிக்கும். பரதவர் கடலில் இரவிற் படகிறஞ்சென்று மீனைப்பிடித்துக்கொண்டு விடியற்காலத்திற் றிரும்புவாராகலின், 'எம்மையாதிண்டிமில் மீளும் தண்டுறை' என்றாள்.

கசூச. பூவரசு, பூவில்லா அரசென்று இரண்டுவகை மரங்களுள்ளன.

கசூசூ. அணையினும் புல்லாப் பொழுதினும் காவலர் எய்துவிப்பார்.

கசூஎ. இருவி - கதிர்கொய்த தினைத்தாள்.

கசூஅ. கலைமேயவள்-சரசுவதி. வாய்த்தால் - கிடைத்தால், வாயின்கண்ணுள்ள நா.

கஎ0. காட்சி - பந்தர்க்காட்சி. வேங்கைமரம் பூத்தால் தினையை அரிவாராதலின், தலைவியை இற்செறித்தலும், தலைவன வருதலின்மையும் உளவாமெனபது கருதது.

கஎரு. உய்யானம்-சோலை. பொய்யாதொழுகும் புனற் பொன்னி: "பொன்னித்தெண்ணீர் தழுநகமன்பர் வாய்சசொலும் பொய்ப்பதன்றால்" (உகரு) என்பர் பின்னும.

கஎச. இனி யாரைப் பார்ப்பேம்.

கஎரு. ஒருதாள், இருதாள், பலகால் என்பவற்றில் உள்ளநயம் உணர்தற்பாலது.

கஎஅ. அம்மனையானவள் - தாயானவளுடைய.

கஎக. சஞ்சிதம் - பழவினைத்தொகுதி.

கஅ0. பமரம் - ப்ரமரமென்பதன் சிதைவு; "பமர மடுப்பக் கடாமெடுத் தூற்றுமோர் பகடு" மீனாட்சியம்மை. காப்பு. ச.

கஅஉ. மார்க்கமென்பது எதுகைபற்றி மாரகமெனவந்தது; 'சரப மருங்கலை யாறுந்தரித்த சடிலா" திருமயிலைத்திரிபந்தாதி, உஅ.

கஅரு. கழுகு - கழுகு; பருந்து; கங்கமென்பதன் சிதைவு.

கஅஎ. கோட்டுமுத்து - யானை பன்றி இவற்றின் கொம்புகளிற் றோன்றிய முத்துக்கள். குருவிந்தம் - ஒருவகை மாணிக்கம்.

கஅஅ. கறையடி - உரல்போன்ற அடியையுடைய யானைகள்; "உரற்காற் கரி" (கசுரு) என்பர் பின்; இரத்தம் தோய்ந்தகாலையுடைய யானைகளென்றுமாம்.

கஅகூ. ஒப்பினள் - உடன்பட்டாள்.

ககூ0. ஐந்தலை நாகம்: இஃது ஒருவகைப் பாம்பு; "ஐந்தலையரவின் சீற்றத் தாரழல்" (சீவக. எசசு.) அலையேல் - வருந்தாதே.

ககூக. நாமத்து ஐவேல் அண்ணல் - அச்சத்தைத் தருகின்ற அழகிய வேலையுடைய அண்ணலே. தாமத்து ஐம்பால் - மாலையையணிந்த ஐந்துபகுதியையுடைய கூந்தல்; ஐம்பாலினியலவை "மைந்நூற்றனைய" (சீவக. உசஙஎ) என்பதும் அதனுரையும் விளக்கும். தயாவினைய பற்றினென வியையும்.

ககூஉ. குடம்பை - பறவைக்கூடு.

ககூஙு. தந்திவெண் கோட்டு வேலி - யானையினுடைய வெள்ளிய தந்தத்தாலாகிய வேலியையுடைய.

ககூச. வா - வருவாயாக; பொழிற்கு வாவென்க.

ககூரு. உரற்காற்கரி: "உரற்கால்யானை" (குறுந். உஙஉ.) ஆகமநற் சரக்கார் - சைவாகமங்களாகிய நல்ல பொருள்கள் நிரம்பிய; சரக்கு - பொருள்; 'சரக்கறைபோவென் றனிநெஞ்சமே" தேவாரம்.

ககூசு. இடையாவருக்குந் தெரியாய் - யாவருக்கும் தெரியாத இடையையுடையாய். மதி - சந்திரன்; உடையா - தோற்று. மதி அகன்றனனே. தலைமகளைத் திருமகளாகப் பாவித்தமையால், தாமரைப்பூவைத் தலைவியினுறையுளாகக் கூறினன்; "பூட்டிடும் பொன்னுறை கோயிலுக காயிரம் பொறகதவு" (உ0ரு) என்பர் பினனும்.

ககூகூ. பாகம் - பக்குவம்; குளிகை: இஃது ஆச்சரியத்தை உண்டுபண்ணும் ஆற்றலையுடையது. அப்பாது என்பதற்கு அந்தக் காலமென்றும், அந்தப் பூவென்றும் பொருள் கொள்க; சுட்டை அயனுக்கு அடையாக்கினும் பொருந்தும்.

உ0உ. செய்ம்மோ-செய்;மோ: முன்னிலையசை. கண்படைசெய்யென்க.

உ0ச. அச்சுறுத்துமுன்னே - அச்சம் செய்வித்தற்குமுன்னே; அச்சு - அச்சம்; "அணங்காற்ற வச்சுறீஇயனறு" பு. வெ. எஎ.

உ0ரு. ஆட்டு உகந்து ஆடும் - உயிர்கள் ஆடச்செய்தலை மேற்கொண்டு தாம் ஆடியருள்கின்ற; "ஆட்டிடு வானுந் தானு யாம்வாற் கடிமை செய்வாம்" (துனியூர்ப்புராணம், கடவுள். ச.) எல்லிவாரல் - இரவில்வராதே. பொன் - திருமகள்; என்றது தலைவியை. திருமகளுக்குக் கோயில் தாமரைப்பூ; அதற்கு இதழ்ஆயிரமாகலின், ஆயிரம் பொறகதவென்றுள். இககருத்து இந்நூல் ககூசு-ஆஞ் செய்யுளிலும் வந்துள்ளது; "காமரை வென்ற கண்ணே" (திருச்சிற். ககூச) என்பதனாலும் அறியலாகும்.

உ0சு. நெல்லிமரங்களுள் ஒருவகை நெல்லியின்கனி அமுதமயுமான தென்று கூறப்படும்.

உ0கூ. தமிழ்நாட்டு மன்னர்களாகிய சேர சோழ பாண்டியர்கள் முடி மன்னராதலின், இங்கே சோழனை 'மகுடமுடி வளவன்' என்றார்.

உக0. தாண்டவம் - இறைவனது நடனம்.

உகக. அளியார் மலர் - வண்டுகள் தேனையுண்ணும் பூ.

உகஉ. என்னை அலைத்தனையே, துன்புற அலைத்தனையேயென்க.

உகங. ஆர்ப்பரவஞ்செய்து - மிகமுழங்கி; "வார்கலைக ளார்ப்பரவஞ் செய்ய" (திருவா. திருவெம். கஉ.) சங்கம் - கூட்டம், சங்கு. நகையால் - நகையோடு.

உகச. அடப்பம்பொழில் - அடம்பமரத்தாலாகிய சோலை; இம்மரப் பெயர் அடும்பெனவும் வழங்கும். சிற்றிடைத்தன்மையொத்து யாவும் பொய்யா யினவாலென இயைக்க.

உகரு. கன்னிப்புன்னை - புதியபுன்னைமரம்; "கன்னி நறுஞாழல் கையி லேந்தி" (சிலப். எ: கூ); "கருங்காவிச் செங்காவி" என்றது பொருண்முரண்.

உகசா. ஏதசாகரம் - துக்கக்கடல். சங்கேதம்-குறிப்பு; இது குழூஉக்குறி யெனவும் வழங்கும்; "சங்கேத மாம்பெயர் வேங்கை புரேசர்"வேங்கைக். சுச.

உகஎ. விறப்பு அறியாமை - நடுக்கத்தைச்செய்யும் அறியாமை; "விறப் பக லுமையோர் பாகன்" திருநாகைக். நாடு. உஉ.

உகஅ. மறி - மான்.

உககூ. கரடி இருளிற் புற்றாஞ்சோற்றைப் பெயர்த்தல், "ஈயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த, குரும்பி வல்சிப் பெருங்கை யேற்றை, தூங்குதோற் றுதிய வள்ளுகிர் கதுவலிற், பாம்பு மதனழியும் பானாட் கங்குல்" (அகநா. அ) என் பதனால் அறியலாகும்.

உஉஉ. புறச்சமயவாதிகள் தம்முட்கூடி மிக்கு முழங்குதலை, "கோமுத்தி யீசர் மெய்ந்நூ, லோகையிற் றேரப் பொறாமத்தர் பித்துரையொத்து" (உஉசு) என்பதனாலும் பின்பு விளக்கினர். ஆய்துஞ்சினாலும் - தாய்துஞ்சினாலும்.

உஉங. சூரியனுதித்தற்கு முன்னதாகச் சுக்கிரன் உதிக்குமாகலின், வெள்ளி கிழக்கே யுதிக்கும் வரையுமென்றாள்; "வெள்ளி முளைத்த விடியல்" பு. வெ. உ0சு.

உஉச. நிதிவைப்பறைகாப்பவர்மான - பொற்றிரள்கள் வைக்கப்பட்டுள்ள அறையைக்காப்பவர் அவ்வறையைச் சூழ்ந்து முழங்கிக்கொண்டே பறைகொட்டி வளைந்துவருதலையொப்ப; "கவ்வையங் கருவி சூழ்ந்து கண்படிக்கு மாடமுந், தெவ்வர் தந்த நீணிதி சேர்ந்த செம்பொன் மாடமும்" (சீவக. சருங.) ஊர் வளை காவலர் - ஊரைவளைந்து காக்குங்காவலர். ஓசையாகிய கிங்கனல்.

உஉசு. கூகை இருத்தற்குரியமரம் வாகை; "வாகை விரிந்துவெண் ணெற் றொலிப்ப மயங்கிருள் கூர்நடு நாளையாங்கே, கூகையொ டாண்டலை பாட" அம்மை மூத்ததிருப்பதிகம், ங.

உஉஎ. பதாகை - பெருங்கொடி; இதுபடாகையெனவும் வழங்கும். பானு ளிரவில்-பாதியிரவில்; "பாம்பு மதனழியும் பானாட் கங்குலும்" (அகநா, அ); "பானுளிரவினிற் றூதுகொண்டோன்" (திருவிளை. கடவுள், உ0.) குட்டு-கோ

றிச்சேவலின் தலையிற் செங்காந்தட் பூவைப்போன்றுள்ளதோருறுப்பு; "கொய்ம்மலர தோன்றிபோற் சூட்டுடைய சேவலும்" (சீவக. எஉ) முட்டாள்: இஃது இகழ்ச்சிக் குறிப்புமாம்.

உஉக. தொடக்கு - அன்பின் பிணிப்பு.

உஉக. நீவி - நீக்கி; "பொற்றோடு நிழன்மணிக் குழையு நீவி" (சீவக. சஅஅ); நீவிச்செல்வமோவென வியைக்க.

உஉஉ. நடுக்கண்டு அன்னை யறியாதெனப் பிரித்துப் பொருள்கொள்க.

உஉஙு. மின்னே இனையல் - மின்போல்வாய் வருந்தாதே.

உஉரு. பசலை - பிரிவால் உண்டாகிய வேறுபட்டநிறம்.

உஉசு. ஈரத்து - அன்புடைமையால்.

உஉஎ. என்னை முறிவாங்கி ஆட்கொண்ட - அடியேனை அடிமையோலை யெழுதுவித்து வாங்கி அடிமைகொண்ட; "ஆவணத்துடையா னடியார்களை", "ஆவணஞ்செய் தாளுங்கொண்டு" (தேவாரம்.) "என்னைமுன்னா ளுழுடையான்" (திருச்சிற். எ); "ஆவணங் கோவணங் கொண்டடி யார்தமை யாண்டவனே" திருவையாற்றந்தாதி.

உஉஅ. அலரினின்றும் வண்டு உகவென்பது ஒருசொன்னயம். இச்செய்யுளின்மூன்றுமடி மடக்கணி.

உஉகூ. ஆறுக்கப்புறமாய்நின்ற கோமுத்தியப்பர்:-"ஐயாறினொ டாறுக் கதிதன்" சீகாழிக்கோவை, கருஅ.

உசக. எத்தாற் பிரிந்தவர்: "எத்திட்ட நெஞ்சுடைக் கள்வரைப் போற்பிழைத்து" (அகூ) என்றார் முன்னும். தொத்தாரழல் - கொத்துக்கொத்தாகக் கவடுவிட்டெரியும் தீ. சுகமுளதா - இன்பமுண்டா? இல்லை.

உசஉ. தோடு - பூமடல். காடு - மயானம்.

உசங. அளைவா யரவு-புற்றின்கண்ணேயுள்ள பாம்பு. இறைவன் பூண்ட அரவு புற்றின்கண்ணுள்ளதன்றாதலால், அளை அரவின் சாதிக்கு அடை; "புற்று டரவணி புத்ரத்யாகர்"(ஙஎரு)என்பதற்கும் இவ்வாறே கொள்க; "புற்றரவே யாடையுமாய்ப் பூணுமாகி" (தேவாரம்.) உளைவாய் - வருத்தத்துடன்.

உசரு. ஏதிலர் - அயலார். என்காதூடு அழற்பகழி தைத்தலை மானும் அச்சொல்.

உசஎ. என்ன - என்று தாய்வினவ. ஆரணங்கு என்செய்வாள்.

உசஅ. "ஒருவன் மலர், நாரின்றி யேதொடுத் தான்பெரு மாலை நணுகுறவே" என்பது சீகாழிக்கோவை, கஅஉ.

உசகூ. அளித்தமணி-நீ கையுறையாகக்கொடுத்த மாணிக்கத்தின். "கிளியாகமங்கள் கிளத்திட" என்றது, "சுகந்தா விலாத்தமிழ் வேதங்க ளோதுந் துறைசைநகர்" (ஙகO) என்பதுபோன்றது.

உருக. புன்கம்பூவிற்குப் பொரி உவமைகூறப்படும்; "பொங்கர் வெண் பொரி சிந்தின புன்கினம்" சிலப். கஉ: "செம்பொன் வேங்கை".

உருஉ. மறையோர்க்குத் தாமரைமாலை யுரித்தாகலின், 'தார்மறையோர்' என்றார். அந்தணரையுஞ் சான்றோரையு முன்னிட்டு மணஞ்செய்வாராதலின், 'மறையோருடனீதுன்னின்' என்றாள்.

உருங. வேங்கைமரம்பூக்கச் சந்திரன் ஊர்கோள்கொண்டகாலம் மணஞ் செய்தற்குரியகாலமாதலின், 'ஆராயு நாண்மற்றென்' என்றாள்.

உருச. பாண்டரங்கம் - இறைவனுடைவிளைன்று; இது, வானோராகிய தேரில் முன்னின்ற திசைமுகன் காணும்படி கலைமகள் வடிவாகிய இறைவன் வெண்ணீற்றை அணிந்தாடியது (சிலப். சு: சச - ரு); இது பண்டரங்க மெனவும் வழங்கும்; "பண்டரங்கமாடுங்கால்" கலி. கடவுள்.

உருரு. கோல் - அம்பு. கூடல் - மதுரை. கண்ணார் - கருதாதவர்களு டைய. தயவு - தயை; "தயவுறு பிரத்தியாகாரமும்" பிரபோத. விவேகன் வனம். அ.

உருசு. "படரடம்பின், பிரசமலர் மணமாறுத் துறைவர்" (ருoஉ) என்பர் பின்னும். முட்டை - அன்னத்தின் முட்டையை.

உருஎ. அங்கமாலை - என்புமாலை. பல வங்கம் - பல் கப்பல்கள். இலவங் கம் - கிராம்புமரம்; "ஏரில வங்கமு மின்கருப்பூரமும்" (சீவக. கக௦க); "கந் தமார் குழைமுகத் தலரில வங்கங் காட்டும்" காஞ்சி. நாடு. சரு.

உருஅ. பராரை - பருமையாகியஅரை. ஆலி - நீர்த்துளி; "மைக்க ணில வாலி சிந்த வைகிய மங்கை" (நைடதம், கைக்கிளை. க); சிந்த இலைக்கு மென்க. பொருட்டால்: ஆல், அசை. பாலிப்பை - தருவாய்.

உருகூ. வரல் - வாராதே. இற்பயம் - வீட்டி லுள்ளாருக்குளதாகும் அச் சத்தை. காவலர் - ஊர்காவலர்.

உசு௦. பெற்றிமை - தன்மை; "பிறவற முரைத்தோர் பெற்றிமை யெல் லாம்" மணி. உக: கசுக.

உசுக. வெண்குழை - சங்ககுண்டலம். எல்லி - இரவு. பாதாளம் மட்டு அவல் - பாதாளமளவும் பள்ளத்தையுடைய. இட்டிடை - சிறிய இடையை யுடையாள்.

உசுஉ. "தொழுந்துதிக் கைக்குப் புகலூ ரெதுவெனுஞ் சொன்னவப்போ, தெழுந்துதிக் கைக்குறித். தெங்கள் பிரானெனு மீசனெனும், விழுந்துதிக் கைக் குன்ற மொன்றுரித் தோனெனும் வெண்ணெருப்பின், கொழுந்துதிக் கைக்குப் பகல்போன தென்னுமென் கோமளமே" (திருப்புகலூரந்தாதி) என்னுஞ் செய்யுளை இதன் பின்னிரண்டடிகள் ஒத்து விளங்குகின்றன. வெய்துயிர்க் கும் - வெய்துயிர்ப்பாள். விழுமென்பது முதலியவற்றிற்கும் இப்படியே பொருள்கொள்க.

உசுங. அக்காரம் - சருக்கரை. அரியேறு - ஆண்சிங்கம். வல்சி தேர் - உணவை ஆராய்கின்ற. வேரல் அூறுஅகர் - மூங்கிற்புதர்களையுடைய வழியில். வாரல் - வாராதே. துடிக்கைக் காவலர் - உடுக்கைப்பறையைத் தாங்கிய கையையுடைய காவலர்.

உசுச. நறுமை - நன்மை; "கோமுத்தி நாதர் நறுந்துறைசை" (உக௦) என்பர் பின்னும்; அன்பின் புனல்-அன்பாகியபுனல். எண்ணும்-எண்ணுவாள்.

உசுரு. தவமேருவார் தொண்டர் - தவத்தால் மேருமலையைப்போன்ற தொண்டர்; "மல்லன் மலையனைய மாதவருரை" (சீவக. உஎஅக) சிவம்-முத்தி. நவம் - புதுமை. அணிநலம் தொலைகின்றதால்: "மென்மார் தளிர்வண்ணம் வெண்ணொண்டலாகி மெலிபவள்" (உசுச) என்றார் முன்னும்.

உகூஎ. இத்தலத்தில் தருமதேவதை தவஞ்செய்து இறைவனுக்கு வாகன மாகிய விடையாயிற்றென்று புராணங்கூறுமாகலின், ஒற்றைப்பொருவிடைப் புத்ரத்தியாகர் என்றார்; "ஆவினருங் கன்றுறையு மாவடுதண் டுறையணைந்து" (பெரிய. திருமூல. கூ.) இதனால், இத்தலத்தை 'கோவடு' என்று சூத சங்கிதை கூறும்.

உகூஅ. தன்னமும் - அற்பமும். தவிர்க்க அறியேம். செல்லும்: இது முன்னிலைப் பன்மையேவல்.

உகூகூ. சுடர் விளக்கன்ன மடந்தை நல்லாய்: "மனைக்கு விளக்க மட வாள்." என்பிடர் பிடித்து உந்தலின் - என்பிடரைப் பிடித்துச் செலுத்துத லான்; உலகவழக்கு இது.

உஎo. அழுந்தச் சொல்லுமாறு ஏது என்க. அருள் நீர் பெய்கொண்டல் நீர்; நீர்: இது சிலேடைநயம்படநின்றது; "நீர்வந்தா லாசை நெருப்பவியுங் காணுமே" அருணைக். கூரு.

உஎச. பதம் - பதவி. இம்மணற்குன்று, வான்தீண்டு மணற்குன்று, நெடுமணற் குன்றெனக் கூட்டுக. காண்டும் - காண்பேம். வா - வருவாயாக.

உஎரு. கொங்குவந்து ஆர் - மணத்தையுடைய காற்றுப்பொருந்துகின்ற; வந்து - காற்று. இரிந்திட வந்தாரென்க.

உஎகூ. உழுவல் அன்பு - எழுமையுந் தொடர்ந்துவரும் அன்பு.

உஅச. தேரில் மணிகட்டியிருத்தல் மரபு; "மணிநா யாத்த மாண்வினைத் தேரன்" (அகநா.ச); சிலம்புஞ் சிலம்படி: மடக்கு. பருமம்-ஒருவகை மேகலை. பொங்கையில் - பொங்குகையில்; பொங்கும்பொழுது, "துயிலையி லேயிடர் துன் னையி லேசெவ்வர் சூழையிலே, பயிலையி லேயிருட் பாதியி லேபசும் பாலனத்தை, அயிலையி லேவய தாகையி லேநமக் கார்துணை சான், மயிலையி லேவளர் சிங்கார வேலர் மயிலையிலே" (தனிப்பாடல்) என்பதில் இத்தப்பிரயோகம் காணப்படு கின்றது.

உஅரு. செருந்தியின்பூ பொற்காசு போல்வதாகலின், செருந்தி பொன்தரு மென்றார். "செருந்திபொன் சொரிதருந் திருநெல் வேலியுறை செல்வர்தாமே" என்பது தேவாரம். "அன்பர் சென்றுழிமுள், ளிண்டுங் கழையும் பயிலும் வெங்கானியல் கேட்டுமிங்கோய், கண்டுங் கலங்கல்செல் லாதிந்த வூரெற் கழற னன்றே" (தஞ்சை. உகூகூ) என்பதன்பொருளை இதன் பிற்பகுதி ஒத்து விளங்குதல் காண்க. யான்படு நோயென்றது, தலைவன் காட்டுவழியிற் சென்று வருந்துகின்றானே என்னுந் துன்பத்தையே.

உஅகூ. எட்டாந் திருவுரு - அட்டமூர்த்தி; பிருதுவிமுதலிய எட்டுவடி வத்தையுடையார்; "பாரு நீரெரி பல்கதி ரிரவியும் பனிமதி யாகாச, மோரும் வாயுவு மொண்கனல் வேள்வியிற் றலைவனு மாய்நின்றார்" தேவாரம். அயரேல்- வருந்தாதே. செவ்வரக்கு உருக்கி விட்டாலன நெறி வெஞ்சுரம்-செவ்வரக்கை யுருக்கிவிட்டாலொத்த வெப்பத்தையும் செந்நிறத்தையுமுடைய வெவ்விய பாலை நிலத்தில். அன்றில் விள்ளா முயக்கம் - அன்றிற் பறவையின் பிரியாதகலவிப்பை

உஅஎ. கார்காலத்திற் கொன்றை பூக்கும், மயில் அகவும்.

உஅஅ. மலைநெல்லைவித்திய நம்மவர் அதற்கு மழைவேண்டி முருகக்கடவுளைத்துதித்தலாற் பெய்யுமழையேயன்றி இது கார்காலத்திற் பெய்யுமழையன்றென்றாள்.

உஅகூ. துவர்ச்செங்கோடல் - செங்காந்தள்; துவர்ச்செம்மை: இருபெயரொட்டு. உற்கை - கொள்ளி. கோபம் - இந்திரகோபப்பூச்சி. உங்கு-இங்கே. கொள்ளியைக்கண்டால் மழை நிற்குமென்றும் வெள்ளமடங்குமென்றுங் கூறுதல் இங்கே அறியற்பாலது.

உகூ௦. வெருவரல்-அஞ்சாதே. துகிற்கொடி- துவசம்; இது வெளிப்படை.

உகூக. இன்பதுன்பம் அவர்க்குமுளவாமென்பது, "தோகைக்குந் தோன்றற்கு மொன்றாய் வருமின்ப துன்பங்களே" (திருச்சிற். எக.) என்ற பெரியார் வாக்கின்பொருளைத் தழுவியது.

உகூஉ. கண்ணீர் குடங்கைவழியே வார.

உகூங. இத்தலத்திற் பலசித்தர்கள் வாழ்தலினால், 'துறைசையில் வாழ் சித்தர்' என்றான். நவகோடிசித்தபுரமென்றும் இதற்கு ஒரு திருநாமமுண்டு. என்னுயிரென்றது, தலைவியை.

உகூச. இயம்பும்: இது முன்னிலையேவற்பன்மை.

உகூரு. புரி - முறுக்கிய. செஞ்சடைமேற் சலம்வைத்த. பொருமல் - அழுகை, துக்கம். ஓசையாகிய அமிர்தம். தான்வருதலைத் தெரிவித்தற்பொருட்டுத் தலைவன் வலம்புரிச்சங்கை முழக்கினன்.

உகூள. அ அயல் நாட்டுழி - அந்த அயல்நாட்டில்.

உகூஅ. சுவையாரமிர்தன்ன சொன்னத்தியாகர்: "அடியார்க்கமுதன்" (திருவாசகம்.) கவையார்மனம் - பிளவுபட்டமனம்.

ங௦௦. முடியாறுகொண்ட - ஆறுமுடிகளைக்கொண்ட; கூக - ஆம் பாடற் குறிப்பைப்பார்க்க. முன்வண்ணம் ஆகுக.

ங௦க. சோமன்றலைக்கணி சொன்னத்தியாகர்: "சோமத் துணியைத் தலைமீது சுமந்த தென்னே, தாமக்கருவைப் பதிக்கண்வளர் தம்பிரானே" தனிப் பாடல்.

ங௦உ. பரசுதல் - துதித்தல்.

ங௦ங. சிந்தை - வருத்தம்: "சிந்தைகூர்மனத்தையாகி" சீவக. ககஉ௬.

ங௦ரு. மரா - ஆச்சாமரம்; "தேம்படமலர்ந்த மராஅமெல் லிணரும்" (மலைபடு. சஉஅ.) பராய் - துதித்து.

ங௦௬. முதுக்குறைவு - பேரறிவு. பொதுக்குறை தீர்மணம் - சிறப்பாகிய மணம். தூஉய் - தூவி.

ங௦அ. சது - நான்கு; "சதுமுக மாகச் சேனை நமர்தலைப் பெய்கவென்றான்" (சீவக. எகூ௬.) மது ஏய் - தேன்பொருந்திய.

ங௦கூ. தோய்ந்த - கலந்த. அவர்சொல்லினும் பொய்வருமென்று அறியேன். ஙக௦. தமிழ்வேதங்களைச் சுகங்கள் ஓதும் என்க.

ஙகக. சேயழல் - செம்மையாகிய அழல்; "சேய்ச்செந் தவிசு நெருப்பென்றெழுஞ் சீறடியார்" சீவக. உஙசஅ.

௩௧௨. அவரே எனதுயிர்க்காவலரே.

௩௧௩. கா - சோலை. கைதவம் - வஞ்சனை.

௩௧௪. வேலைக்கரைமணற்கு ஒப்புறுங்கங்குல் - நிலைவையுடைய இரா.

௩௧௫. மடைத்தேங் குவளை: ௭௦-ஆம்பாட்டின் குறிப்பைப்பார்க்க. ஓர் புடை - ஒருபக்கம்.

௩௧௬. கண்ணும் பிறிதாய் மெய்யும் பிறிதாயெனக் கூட்டுக. கரியுண்ட வெள்ளிற்கனியென் - வேழமென்னும் பெயரையுடைய நோயால் உள்ளீடு இழக்கப்பெற்ற விளாம்பழத்தைப்போல; "வேழந் துற்றிய வெள்ளிலேபோல்...தமியனுக", "வெஞ்சின வேழ முண்ட வெள்ளிலின் வெறிய மாக", "வெஞ்சின வேழ முண்ட விளங்கனி போன்று" (சீவக. ௨௩௨, ௧௦௨௪, ௧௧௨௨); "வெண்கோட்டுக் களிறுண்டதோர் விளங்கனிபோல் வறிதா" (நந்தை.௫௬); "ஓர்மத யானை...மடப்பிடி வாயிற் கனிந்துவிழும், விளங்கனி நல்கக்கண் டானு ஈ°துண் விளங்கனியே" (வெங்கைக். ௧௨௬); அந்நோய்க்கு வேழமென்னும்பெயர் இருத்தலால், யானையின் பரியாயப்பெயர்களையும் அதற்குரிய அடைமொழிகளையும் கவிகள் கூறுதல் மரபு.

௩௧௮. 'பங்கயப் பாதஞ்சூட்டும்' என்பது வகையுளியாய் இதில் வந்தது. ஏதுஎன்ற சித்தம் - யாது என்ற கருத்து.

௩௧௯. இச்செய்யுள் எழுத்துச்சுருக்கமென்னும் அணியிலக்கணத்தின் பாற்படும்; 'காவிரி' எனனும் இபபெயரை எழுத்துப்பெருக்கமென்னும் இலக்கணததில் அமைத்து ஒருவர் பாடியிருக்கின்றனர்:—"சோலையை யோரெழுத்தா லெண்சொல்லுந் தொக்கதன்மே, னீலப்பே ரெவ்வெழுத்தி ஞனிரம்பு - மாலைக், குடைவேந்தன் செனனி குலநதியின் பேரைக், கடைசேர்ந்த வோரெழுத்தாற் காண்" நன். மயிலை. மேற்.

௩௨௦. தண்ணீர் தன்னுள் அழுத்துதலால்.

௩௨௧. தோற்ற அப்பகைமையைத் தீர்க்கும் பொருட்டு.

௩௨௨. சீறுதல் அரவிற்கு அடை. 'அன்று' என்பது ஐம்பான் மூவிடத்துக்கும் பொதுவென்பர், நேமிநாதமுடையார்.

௩௨௩. நாண்மதி - பிறை. நம்மாணிக்கக்கொம்பென்றது, தலைவியை.

௩௨௪. "கழுமல வூரர்க்கம்பொ, ஞயிரங் கொடுப்பர் போலு மாவடு துறையனரே" தேவாரம்.

௩௨௫. மால் தறுகண்ணரின் - மயக்கத்தையுடைய தறுகண்மையை (அஞ்சாமையை) உடையார்போல.

௩௨௬. பரம்பு - பரவிய. பாரமாகிய கொண்டையையும் கொங்கையையுந்தாங்கி. போதும்போது - போகுங்காலத்தில்.

௩௨௭. வடவைக்கும்: உம்மை, உயர்வுசிறப்பு. இயைந்தன்று - உடன்பட்டது. அன்னத்தின் தூவி - அன்னச்சிறகு.

௩௨௮. அணைமலர்க்கு - அணையிற்பரப்பிய பூக்களுக்கு. பெண்துணையுடன் - உமாதேவியாருடன்.

௩௨௯. அந்தகாரி - அந்தகாசுரனுடைய பகைவர். அப்பிறப்பில் - பழம் பிறப்பில்.

௩௩௦. சிறந்தன்று - சிறந்தது. செந்நெல் செங்கருப்பம் பயிரிற்சிறந்த - நெற்பயிர்கள் கரும்புபோலவே சிறத்தற்கு இடமாகிய; "செந்நெலே கன்னல் காட்டச் சேர்ந்தயற் செறுவினின்ற, கன்னலே கமுகுகாட்டுங் கங்கைநீர் நாட" (வி - பாரதம், நிரைமீட்சி. ௪௦௫); செந்நெலாலும் கருப்பம் பயிராலும் சிறந்த என்றலும் ஆம்.

௩௩௧. கொன் - பயனில்லாமை. பயந்தார் - பெற்றோர். என்பும் அரவமும் புனைந்த.

௩௩௨. கங்காளர் - முழுவெலும்பை அணிந்தவர். பொங்கா - பொங்கி. நாவாற்சுட்டபுண்: "நாவினாற் சுட்டவடு" திருக்குறள், ௧௨௯.

௩௩௩. உத்தமனார் சுருதியின் - உத்தமனாருடைய திருவாக்காகிய வேதம்போல.

௩௩௪. நீங்கள் என்பது செய்யுளிலும் வழங்குகின்றது; "நீங்களு மவரு நேய நெறி முறை தவறாது" (வி. பாரதம், சூதுபோர். ௩௮.) அடக்குவித்து யான் எய்துவல்.

௩௩௬. கல் வேல் போலத் தைத்தல்: - "வெங்காட்டு அரமாய கற்றிரட் காற்றினவோ" (௩௫௫) என்பர் பின்னும்.

௩௩௭. நவந்தரு பேதமுமானார் - ஒன்பதுவகையாகிய திருவுருவத்தையுமுடையார். அருவத்திருமேனி நான்கு, உருவத்திருமேனி நான்கு, உருவருவத் திருமேனி ஒன்று. நுதல் வேர்வு நீவி - நுதல்வேர்வையைத் துடைத்து; "நங் கையைத் தழீஇ நன்னுதல் நீவி" (பெருங். ௧. ௩௬: ௩௧௬.) ஐம்பாற்கு - கூந்தலுக்கு.

௩௩௮. அகளன் - அமலன். உம்பர்பிரான்மகள் - இந்திரன்மகளாகிய தெய்வயானை. அவன் மருகன்-முருகன். நீபத்தொடை-கடம்பமாலை; "மாரஅத், துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்" முருகு. ௧௦ - ௧௧.

௩௩௯. இனன் - சூரியன். செல்லொணாது - செல்ல ஒண்ணாது. மரைப்பால் - மரையென்னும் மிருகத்தின்பால். வாமான் தசை - வாவுகின்ற மானின் இறைச்சி; "மரையான் கறந்த நுரைகொடுதீம்பால், மான்றடி புழுக்கிய புலவு நாறு குழிசி" புறநா. ௧௬௮.

௩௪௦. மதி ஊருகின்றமதில். துங்கம் - மேன்மை.

௩௪௧. ஞானச்செல்வர் - ஞானாசிரியர்.

௩௪௨. கோகிலம் எங்குற்றது - தலைவி எங்கேசென்றாள்; "குயிலெனப் பேசுமெங் குட்டனெங்குற்றது" திருச்சிற். ௨௨௪.

௩௪௩. சமரம் - போர். விரும்பாரின் - விரும்பாதவரைப்போல. அன்னே - தாயே. வள்ளிலை - பெரிய இலை.

௩௪௪. முலையமிர்து - பால். கொளுத்தி - பொருத்தி. சலம் - தீவினை; "சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல்" (திருக்குறள். ௬௬௦.) நஞ்சுகள் பல வாதலின், 'நஞ்சின் ஒன்றாஎனைக்கண்டு' என்றாள். "மாறாவளவயல்" (தஞ்சை. ௩௨௫) என்னுஞ் செய்யுளின்பொருளை இச்செய்யுள் தழுவி வந்தது.

௩௪௫. "தோயமுருப்பாலை வன்னிக்கு விடுவாயென்றாள்" என்னுங்குறிப்புரை, "இராமேசுரத்திற்குப் போவனென்றாள்" (தனிப்பாடல்) என்பதை நினைப்பூட்டுகின்றது. சோலையம் பூங்குழல் - சோலையைப்போன்ற அழகிய பூவையணிந்த கூந்தலையுடையாள்; "கண்வேலையுங் கூந்தனெடுங்,காடுங் கடந்து வந்தான்" (வெங்கைக். ௫௭.) நென்னல் மாலையில் - நேற்றிரவில்.

௩௪௬. பைய நடந்தாளை யான்உய்யக் காட்டுதி.

௩௪௭. உன்னு - உன்னி. நின்பொன்னுனவள் - நின்மகள்; "பொன் வரக் கண்டன" (௩௭௧) என்பர் பின்னும்.

௩௪௮. உன்மதி நன்றுநன்று: இஃது இகழ்ச்சிக்குறிப்பு; 'ஒன்றுநினைக்க' என்னுந்தொடர், "ஒன்றைநினைக்கினது வொழிந் திட்டொன்றாகும்" (நல்வழி, ௨௭) என்பதை நினைப்பிக்கின்றது.

௩௫0. தெற்றியவார்சடை: "தெற்றார்சடைமுடியான்" திருவா. உயிருண்ணி. ௫.

௩௫௧. அவையே அரங்கு கொண்ட - சபையையே ஆடிடமாகக்கொண்ட. வரங்கிடத்தல் - மகப்பேறு முதலியனவற்றைக்கருதினோர் செய்யும் ஒரு தெய்வவழிபாடு; "வரங்கிடந் தான்றில்லை யம்பலமுன்றிலம் மாயவனே" (திருச்சிற். அ௬.) உள்ளினும் - நினைத்தாலும். வந்தி - மலடி.

௩௫௩. கடமான் - ஒருவகை மான். நிணப்பலி - நிணத்தையுடைய பலி. இடுவல் - இடுவேன்; "நிணப்பலியோக்குவன் (திருச்சிற். ௨௩௫.) கொடி - காக்கை, பூங்கொடிபோல்வாளாகிய தலைவி.

௩௫௫. அரமாயகற்றிரட்கு-வாளரம்போன்ற கல்லின் தொகுதிக்கு. அம்மனை - அம்மானை. பஞ்சி - பஞ்சு. ஆற்றினவோ - பொறுத்தனவோ; மெல்லடிகள் ஆற்றினவோ. என்க; "பஞ்சிகாண் பேட்டினும் பையெனப் பையெனவென், தஞ்சிப்பின் வாங்குமடி" (நாலடி. ௩௯௬) என்பது இங்கே நினைக்கற்பாலது.

௩௫௬. ஆடவரீர் - விளையாடுதற்கு வருமின். முத்தஞ்சூட வரீரென்னும் - முத்தமாலையைச் சூடுதற்கு வாருங்களென்று சொல்லுகின்ற. பாடகம்-காலணிகளுளொன்று; 'பாடகமான தொடர்புற' என்பது "பாடகம் போலச் சூழ்ந்த பழவினை" (சீவக. ௫௧0) என்பதனாலும் அதன் உரையாலும், "உயிர் புகும்சட்டகம்" என்னும்கல்லாடச் செய்யுளிலுள்ள 'பழவினைபுகுந்த பாடகம் போல்' என்பதனாலும் அதன் உரையாலும் விளங்கும். எங்ஙன் - எங்ஙனமென்பதன் சிதைவு.

௩௫௭. வில் விலக்கும் புருவத்தாள் - தான் ஒப்பல்லவென்று வில் விலகிச்செல்வதற்குக் காரணமான புருவத்தையுடையவள்; "சிலைவிலங்கு நீள்புருவம்" (யா-காரிகை உரை. மேற்.)எனபர். விலங்கு ஒல்லென்று அதிர்குரல்-மிருகங்கள் ஒல்லென்று முழங்குகின்ற ஒலியை. கேட்டொறும் - கேட்குந்தோறும். கோட்டிமலத் தொலைவிலங்கை - துன்பத்தைச்செய்யும் பாசமாகிய பழையபிணிப்பை. விலங்கற்கண் - மலையின்கண்.

௩௫௮. நீந்த அரியார். "துறைசைப் பதிவைத்த தீபமன்னுள்" (௩௯௧) என்றார் முன்பும். தலைவியேந்திய பாவையைக்கண்ட நற்றாய், அதன் தனிமை

யைக்கண்டு சோர்வுறுவள் என்பதை, "இதுவென் பாவை பாவை யிதுவென், னலமரு நோக்கி னலம்வரு சுடர்நுதற், பைங்கிளி யெடுத்த பைங்கிளி யென்றி வை, காண்டொறுங் காண்டொறுங் கலங்க, நீங்கின ளோவென் பூங்க ணோளே" (ஐங்குறு. ௩௭௫) என்னும் அருமைச்செய்யுள் நன்கு விளக்குகின்றது.

௩௫௯. ஒள்ளொளி - மிக்க ஒளி. 'வெள்ளிவெற்பின் றெள்ளொளிபாய்ந்த திகந்தமும்' என்பது நூலாசிரியருடைய சைவப்பற்றை நன்கு புலப்படுத்து கின்றது. அள்ளொளி - செறிந்த ஒளி. அணங்கல் - வருந்தாதே.

௩௬௦. வெப்பு அழல் ஆற்று - வெம்மையையுடைய நெருப்புமயமாகிய வழியில். சென்றனளே: ஏ, வினா. முக்கோல்பிடித்த முனிவர் முக்கோற்பகவ ரென்று வழங்கப்படுவர்; தொல். மரபு. சூ. ௭௦.

௩௬௧. "மன்னர் திருவு மகளி ரெழினலமுந், துன்னியார் துய்ப்பர் தகல் வேண்டா" (நாலடி. ௧௬௭) என்பது இதன் இறுதியடியின் பொருளை நன்கு விளக்குகின்றது.

௩௬௨. கண்டனையே: ஏ - வினா. புலியின் எயிறு இருந்தாலி - புலிப்பல் லைக்கோத்த பெரியதாலி; "புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி...கானவன் மகளே" அகநா. ௭.

௩௬௩. நீந்தியென்றாள், கடத்தற்கருமைபற்றி. "தான்றாயாக் கோங்கந் தளர்ந்து முலைகொடுப்ப, வீன்றாய்நீ பாவை யிருங்குரவே - யீன்றாண், மொழி காட்டா யாயினு மென்னையிற் றாள்சென்ற, வழிகாட்டா யீதென்று வந்து" (திணைமா. ௬௫) என்பதன் பொருளையும் சொல்லையும் இச்செய்யுள் தழுவி மிக அழகுபெற்றுள்ளது.

௩௬௪. கவை ஏய் அழல் - பிளவுபட்டு எரிதல் பொருந்திய நெருப்பு; "கவைக்கொழுந் தழல்" (திருவிளை. அவை. ௨.) வேடர்களால் அச்சமுற்றகளிறு. செம்பார் - சிவந்தபூமி; பாலைநிலமாதலின், இங்ஙனங் கூறப்பட்டது; "செவ் வரக் குருக்கிவிட் டாலன" (௨௮௬) என்றார் முன்னும்; "அரக்கத் தன்ன செந் நிலப் பெருவழி" அகநா. ௧௪.

௩௬௬. அன்னே - தாயே.

௩௬௭. தூண்டற் கருஞ்சுடர் - தூண்டாவிளக்கு; "தூண்டா விளக்கின் சுடரனையாய்" (திருவாசகம்.) என்கால் சிரிந்து சலித்தன. அர்புடன் - அன் புடன். வருபவர்களைப் பார்த்துப் பார்த்து என்கண்கள் ஒளியை யிழந்தன. இச்செய்யுள், "காலே பரிதப் பினவே கண்ணே, நோக்கி நோக்கி வாளிழந் தனவே, யகலிரு விசும்பின் மீனினும், பலரே மன்றவிவ் வுலகத்துப் பிறரே" (குறுந். ௪௪) என்பதன் பொருளைப்பெற்று அழகுற்று விளங்குதல் காண்க.

௩௬௮. பழுவம்-காடு. துரீஇ=துருவி-தேடி. அன்னை: அண்மைவிளி.

௩௬௯. காம்பு - மூங்கில்.

௩௭௦. வதுவைக்கு இசையாரை - விவாகத்திற்கு உடன்படாதவர்களை. அசோகந்தரு - அரசமரம். அதுலன்னும்=அதுலனும் - ஒப்பில்லாத தலைவனும். கூறும்: இது முன்னிலை யேவற்பன்மை.

நஎக. பொன்வரக் கண்டன்ன-திருமகள் வரக்கண்டாலொத்த; பொன்-தங்கமுமாம்; "பொன்னு னவள்சுரத் தூடே விடலையின் போயினளே" (நசஎ) என்றார் முன்னும்.

நஎஉ. அரியோசை - வண்டுகளின் ஓசை.

நஎந. இன்னே - இப்பொழுதே; "இன்னே பெறுதிநீ முன்னிய வினையே" முருகு. சுசு.

நஎரு. 'புற்றுடாவணி' என்பதன்பொருளை உசஙு-ஆம் பாட்டின் குறிப்புரையிற் பார்க்க. பற்று - கையைப்பற்றி; "அங்கைத் தலம்பற்றி" (நஎஅ) என்பர் பின்னும்.

நஎசு. ஆன்றவர் - அந்தணர் சான்றோருள்ளிட்டார். காணிய - காண்பதற்கு. வருமென்று - வருவாளென்று.

நஎஎ. வன்னிமுன் - ஓமத்தீயின் முன்னே. பொன்னுண் - மாங்கலிய சூத்திரம்.

நஎஅ. சங்கைப்படாது - ஐயமின்றி.

நஅக. ஏதும் திரிவின்றி - சிறிதும் வேறுபாடில்லாமல்.

நஅஉ. வாண்மின்-மின்னலாகியவாள். பகழிச்சோனைப் படைமுகில்-அம்பை இடைவிடாது பொழிதலையுடைய மறவர்சேனையாகிய மேகம். தேர்பருதியென்றது தலைவனை; முகில் மின்னி இடித்துப்பரிதியைச் சூழ்கின்றதென்பது மற்றொருபொருள்.

நஅந. கணைத்தெய்வம் - பாணமாகிய தெய்வம். இராமனுடைய அக்கினிக்கணை முன்பு கடலைக் குடித்தாற்போல என்னுடையகணையும் இச்சேனைக் கடலை இல்லையாக்குமென்று தலைவன் கூறினன்.

நஅச. வேதத்துரகத்தின் - வேதமாகிய குதிரையைப்போல; "சண்டமறைப் பரிதனக்கா தாரமாகித் தரிப்ப" (திருவிளை. நரிபரி. எசு.) எம்மையர் வில்லை வளைத்துத்தோன்ற. வென்றந்த - புறங்காட்டிய.

நஅசு. சோபானம் - படி. நாதாந்தர் - நாதத்துவத்தைக் கடந்தவர். உழப்பு - முயற்சி; "உழப்பின்வாரா வுறுதிகளுளவோ" முதுமொழிக்காஞ்சி.

நஅஎ. வஞ்சினம் - சூள், சபதம்; உஎ-ஆம் பாட்டிற்காண்க.

நஅஅ. அலர்வாளி - பழிமொழியாகிய பாணம். மலர்ப்பாணமென்பது மற்றொருபொருள். "அலராம் பெரிய சரந்தொடுப் பார்க்கெங் ககப்பட்டதே" (சoக) என்பர் பின்னும்.

நஅகூ. விரகவிடத்தை - பிரிவாகிய விஷத்தை. கொக்கிறகம் பூவையும் தாளியறுகம்புல்லையுமணிந்த கனகத்தியாகர்; "கோகிறகு சென்னி யுடையான் கண்டாய்" (தேவாரம்); "தாளியறுகின்றாய்போற்றி" (திருவாசகம்); வெற்பர்தந்த மணியென்றது தலைவன் கையுறையாகக் கொடுத்தமணியை; சித்தகுளிகையென்பது மற்றொரு பொருள். பதமனு - சொல்லாகிய மந்திரம். மருந்து - ஔஷதம். விடவேகத்தை மணிமந்திர ஔஷதங்களால் வெல்லுதல் உண்டென்பதை இச்செய்யுள் அழகுறப் புலப்படுத்திநின்றது.

௩௯௦. விடையப்பகை - ஐம்புலன்களாகிய பகையை. நரை - வெள்ளை. நார் - அன்பு. அவாத்திரை - ஆசையாகியகடல். உன் திருவுள்ளம் எங்கே நின்றது.

௩௯௧. கம் தண்கொடி என்றது, தலைவியை. முருகு - மணம். இதழ் - பூவிதழ்,கீழுதடு. அன்னை:இஃது அண்மைவிளி. தலைவனுக்கு வண்டு உவமை. ஒருகொடி, முகையைக்காட்டி மலர்ந்து மணந்தோன்ற இதழால் தேனைத்தர ஒருவண்டு உண்டு மனமகிழுமென்பது மற்றொருபொருள்.

௩௯௨. சிரம் அங்கை ஆண்டவர் - பிரமகபாலத்தை அகங்கையில் ஏந்தியருளியவர்; சிரமம் கையாண்டவரெனப் பிரித்து நடனப்பயிற்சியில் மிக்க தேர்ச்சியுள்ளவரென்று பொருள்கொள்ளுதலும் பொருந்தும்; "பையாவின் சூட்டிற் சிரமபத நாட்டினன்" (திருவேங்கடமாலை, ௧.) வரமங்கையாள் - வரத்தால் உதித்த மங்கைப்பருவமுடையாள்; "மங்கைப்பருவத்திவள்" (வேங்கைக்.) என்பர். கந்தரமும் - மேகமும். கந்தரமும்பொழிகவென்...தாரைகான்றிடும்' என்பது, "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்,பெய்யெனப் பெய்யுமழை" (திருக்குறள், ௫௫) என்பதனை உட்கொண்டது.

௩௯௪. நின்மகடோடுத்தானும் - நின்மகளும்.

௩௯௫. பிறிதொரு தெய்வம்-வேறொரு தெய்வத்தை. தெம்முனைமாட்டு-பகைவரிடத்தில். தெவ்முனை: "திருந்தார் தெம் முனை"பு. வெ. ௫அ.

௩௯௬. பாவையர் - இங்கே பரத்தையர். மாது - தலைவி.

௩௯௭. உரியோன் - தலைவன்.

௩௯௮. கம்பம் - நடுக்கம். கொம்பர் - கொள்கொம்பு.

௩௯௯. உள்ளலரில்-நினையாதவரைப்போலே. மேதிப்பகடு-எருமைக்கடா.

௪௦௦. துவர் உந்து வாய் மங்கை - பவளத்தை ஒப்பல்லவென்று தள்ளுகின்ற வாயையுடைய மங்கையே.

௪௦௧. கிடங்கு எயில் - அகழியும் மதிலும். முல்லைநிலத்திற் றோன்றிய மான் சரந்தொடுப்பார்க்கு எங்கே அகப்பட்டது என்பது மற்றொருபொருள்.

௪௦௨. இல்லத்து - வீட்டில். நாண் - நாணம். [யார்.

௪௦௩. ஒள் நந்தி - ஒளியையுடைய நந்தியென்னுந் திருநாமத்தினையுடை

௪௦௪. சதிர் - திறமைப்பாடு.

௪௦௫. 'பிரிந்தவர் கூடினாற் பேச வேண்டுமோ' (கம்ப. மிதிலை.) என்பதை உட்கொண்டு, 'கலந்தார் பெறுகலங் கூறுந் தரமன்று' என்றார்.

௪௦௭. சேய் உதயம் - பிள்ளை உதித்ததை.

௪௦௮. நிலவிய - நிலைத்த, விளங்கிய.

௪௧௩. "வைகொண்ட ஊசிகொற் சோரியின் விற்றெம்மில் வண்ணவண்ணப்,பொய்கொண்டு நிற்கலுற் றேபுலை யாத்தின்னி போந்ததுவே"(திருச்சிற். ௩அ௬) என்பதை இச்செய்யுளுடன் ஒப்பிடுக.

௪௧௬. கூத்து இது என்? கூத்தரில் ஆரியக்கூத்தரென்ற ஒருவகையாருண்மையின், கூத்தனை 'ஆரிய' என்றாள்.

௪௨௦. ஆடமணங்கூர்-நீராடுதலால் வாசனைமிக்க. [யராகிய மங்கையர்.

௪௨௧. சிவம் தரும்-முத்தியைக் கொடுக்கின்ற. சேடிச்சிறுமியர் - தோழி

சஉச. கத்தர்=கர்த்தர் - தலைவர். ஆயம் நீத்து - தோழிமாரை நீத்து.

சஉரு. 'அமிழ்தென்ன......யுவர்த்தனிர்' என்பது, "வேண்டியபோ துள் ளங்கைத் தேனுனே ஞேர்மதலை தோன்றியபின், னுள்ளங்கைத் தேனு னுமக்கு' (தனிப்பாடல்) என்பதை ஒத்து இனிமை பயக்கின்றது.

சஉசு. செவ்வி - சமயம், அழகு. [லையாது - தலைவன் வருந்தாதபடி.

சஉக. கறுப்பென்பதற்கு மறுவென்றும் பொருள் கொள்க. ஊரன்

சகூஉ. ஓவிலர் - ஒழிதல் செய்திலர்; நன்னுளில் - முகூர்த்த தினத்தில்.

சகூச. கல்வி வாய்ந்தவர் வளராநிற்பர்.

சகூசு. இனி என்செய்கோ - இனி என்செய்வேனே.

சகூஎ. மகரம் - ஒருவகை மீன். தகரம் - மயிர்ச்சாந்து.

சகூஅ. தேக்கம் - நிறைதல். அறப்புறங்கள் - தருமத்தின்பொருட்டு விடப்பட்டுள்ள இறையிலி நிலங்கள்; "அடிசில் வைக லாயிரம் மறப்புறங்க ளாயிரம்" (சீவக. எசு.) கட்டளை - விதி.

சகூக. மலங்காவகை - மயங்காதபடி. நீலம் - கருமை.

சச0. கறை - விடம், கரியநிறம். இறைகொண்ட - தங்குதல்கொண்ட. மால் - மேகம். [காணிக்கை.

சசக. அல் உந்திய - இருளை ஒப்பல்லவென்று தள்ளிய. அடியுறை -

சசஉ. நீந்தா - கடக்கமுடியாத. மாந்தாவகை - இறவாத வண்ணம்.

சசகூ. நமர்-நந்தலைவர். சசச. கமலம் கருக. பனியினைக்கண்டிலரோ.

சசசு. 'உயிர்கட்கு அருந்துணையாய் நின்ற கோமுத்தி யீசர்': "அருந் துணையை யடியார்த மல்லல் தீர்க்கு மருமருந்தை" தேவாரம். [யுடையவர்.

சசஎ. சாந்தம் - சந்தனக்குழம்பு. ஏந்து அத்தன் - ஏந்திய கையை

சசஅ. எஃகம் - வேல். கோவாத முத்தனையாய் - துவாரம் செய்யப் படாத முத்துப்போல்வாய். [பனிபெய்ய.

சசக. தொனித்திடும் - முழங்கும். பனித்திரள் தூங்க - மிகுதியாகிய

சருக. நாவியங் குழலாய். [குமரி - பாற்கடலிற்றேன்றிய திருமகள்.

சருஉ. பகிரண்ட கோடி - வெளியேயுள்ள அநேக அண்டங்கள். திரைக்

சருகூ. வெண்டேர் - கானல்.

சருச. 'தமதன்பர்' என்பது "நினதடியார்" (திருவா.) என்பதுபோல நின்றது. வணங்காதவரின் - தொழாதவரைப்போல. திக்கு - ஆதரவு; 'திக்குவேறில்லை' (அருணகிரியந்தாதி), 'திக்குவேறில்லை நீயே' (அருணுசலகவி ராமாயணம், சுந்தா.) சிறைநிறைந்த கொக்கு - பக்கத்தில் நிறைந்துள்ள மாமரம்; இறகு நிரம்பப்பெற்ற கொக்கென்னும் பறவை.

சருஎ. பஞ்சாக்கர தேசிகன் மாமரபு வாழி - ஸ்ரீ நமச்சிவாய தேசிகரு டைய பரம்பரைவாழ்க.

# கிளவிக்கொத்து.



# செய்யுண் முதற்குறிப்பகராதி.



துணைவந்தவிநாயகர் துணை.